# நீதி வெண்பா

பதிப்பாசிரியர்
ய. மணிகண்டன்




சரசுவதி மகால் நூலகம்
தஞ்சாவூர்

தஞ்சாவூர் சரசுவதி மகால் வெளியீட்டு எண் : 436

# நீதி வெண்பா

பதிப்பாசிரியர்

முனைவர் ப. மணிகண்டன்,
தமிழ்ப் பண்டிதர்,
தமிழ்த்துறை,
சரசுவதி மகால் நூலகம்,
தஞ்சாவூர் - 613 009.




தஞ்சாவூர் மகாராஜா சரபோஜியின்
**சரசுவதி மகால் நூலகம்,**
தஞ்சாவூர் - 613 009.

2002 கி.பி. விலை : ரூ. 30 - 00

## நூற்பதிப்பு விளக்கக் குறிப்பு

| | | |
|---|---|---|
| நூற்பெயர் | : | நீதிவெண்பா |
| பதிப்பாசிரியர் | : | முனைவர் ய. மணிகண்டன் |
| வெளியிடுவோர் | : | இயக்குநர், சரசுவதி மகால் |
| வெளியீட்டு எண் | : | 436 |
| மொழி | : | தமிழ் |
| பதிப்பு | : | முதல் பதிப்பு - 2002 |
| தாள் | : | 17கி.கி டி.என்.பி.எல். |
| நூல் அளவு | : | 21 x 14cm |
| பக்கங்கள் | : | 105 + xx |
| படிகள் | : | 500 |
| எழுத்து | : | 12 புள்ளிகள் |
| அச்சிட்டோர் | : | ஒளியச்சு மற்றும் ஒளியச்சுக் கோப்பு, சரசுவதி மகால் நூலகம். |
| புத்தகக் கட்டு | : | மெலிந்த அட்டை |
| பொருள் | : | நீதியிலக்கியம் |
| பகுப்பு | : | 031,1x |
| விலை | : | ரூ.30-00 |

## வெளியீட்டாளர் முகவுரை

தமிழிலக்கியம் இயற்கை, காதல், வீரம், பக்தி, நீதி முதலிய பல்வேறு பொருண்மைகளில் மலர்ந்து மணம்வீசும் மாண்புமிக்கது. உலகத்தின் தலைசிறந்த இலக்கியங்களுள் ஒன்றாகவும் தமிழின் தலைசிறந்த இலக்கியமாகவும் திகழும் திருக்குறள், ஒரு நீதி இலக்கியம் என்பதும், நீதி இலக்கியங்கள் பல தமிழில் நேர்த்திமிக்கனவாய்த் தோன்றியுள்ளன என்பதும் குறிப்பிடத்தக்கன.

நேர்த்திமிகு நீதி இலக்கியங்களின் வரிசையை அணிசெய்யும் நூல்களுள் ஒன்றே இங்குப் பதிப்பித்து வெளியிடப்பெறும் 'நீதி வெண்பா' நூலாகும்.

நூறு வெண்பாக்களால் எளியநடையில் நீதிகூறும் இந்நூல், ஒப்புமைப் பகுதிகளுடன் கூடிய பதிப்பாக இங்கு மலர்கின்றது.

இந்நூலை நன்முறையில் பதிப்பித்தளித்த முனைவர் ய. மணிகண்டன் அவர்களுக்கு என் பாராட்டுகள்.

இந்நூல் வெளியீட்டுக்குத் தேவையான நிதியுதவியினை நல்கியுள்ள நடுவண் அரசுக்கு முதற்கண் என் நன்றியை உரித்தாக்குகின்றேன்.

இந்நூலை நுண்ணாய்வுசெய்து வெளியிடப் பரிந்துரைத்த பேராசிரியர் முனைவர் பா. மதிவாணன் அவர்களுக்கு என் நன்றி.

இந்நூல் நன்முறையில் வெளிவர ஆவனசெய்துள்ள நூலக நிருவாக அலுவலர் திரு. சாமி. சிவஞானம் அவர்களுக்கும் நூலக வெளியீட்டு மேலாளர் திரு. அ. பஞ்சநாதன் அவர்களுக்கும் என் பாராட்டுகள்.

இந்நூலை ஒளிஅச்சு வழி அச்சிட்ட திரு. க. பத்மநாபன் அவர்களுக்கும் என் வாழ்த்துகள்.

இலக்கிய ஆர்வலர்களுக்கு இந்நூற்பதிப்பு நல்விருந்தாகும் என நம்புகிறேன்.

தஞ்சாவூர்,
25 .4.2002.

**சி. கோசலராமன், இ.ஆ.ப.,**
மாவட்ட ஆட்சித் தலைவர்
மற்றும்
இயக்குநர்,
சரசுவதி மகால் நூலகம்.

# உள்ளுறை

பக்க எண்



• • • • • •

# நீதிவெண்பா - பதிப்பு முன்னுரை

**தமிழில் நீதியிலக்கியங்கள் :**

**'நீதிநூல் பயில்'**

*- இது மகாகவி பாரதியின் வாக்கு.*

நீதியிலக்கிய வளம் மிக்க மொழி நம் தமிழ்மொழி ! தமிழை அணிசெய்யும் தனிச்சிறப்புடைய திருக்குறள், ஒரு நீதியிலக்கியமும் அன்றோ !

சங்கத் தனிப்பாடல்களிலும், காப்பியச் செய்யுள்களிலும் அறநூற்கருத்துகள் ஆங்காங்கு இடம்பெற்று மனிதகுலம் வாழ்வாங்கு வாழ வழிகாட்டுகின்றன.

பதினெண்கீழ்க்கணக்கு நூற்றொகுதியுள்இடம்பெற்றுள்ள திருக்குறள், நாலடியார், நான்மணிக்கடிகை, திரிகடுகம், சிறுபஞ்சமூலம், ஆசாரக்கோவை, பழமொழி நானூறு, ஏலாதி, இன்னா நாற்பது, இனியவை நாற்பது, முதுமொழிக்காஞ்சி ஆகியன நேர்த்திமிகு நீதியிலக்கியங்களாக நிலவுகின்றன.

பிற்காலத்தில் ஔவையார், அதிவீரராம பாண்டியர், உலகநாதர், குமரகுருபரர், சிவப்பிரகாசர் முதலிய புலவர் பெருமக்கள் படைத்த நீதிப்பனுவல்கள் பொலிவுமிக்கவை.

மிகப்பல நீதிசதகப் படைப்புகளும் தமிழில் தனியழகோடு தோன்றித் துலங்குகின்றன.

இருபதாம் நூற்றாண்டிலும் நீதியிலக்கியத் தோற்றம் நிகழ்ந்துகொண்டுதான் இருக்கிறது. மாயூரம் வேதநாயகரின் நீதிநூல், பாரதியாரின், பாரதிதாசனின் ஆத்திசூடிகள் முதலியன ஏற்றமிகு இக்கால நீதிநூற் படைப்புகள் !

**நீதியிலக்கிய யாப்பு :**

குறள்வெண்பா, நேரிசைவெண்பா, குறள்வெண்செந்துறை, அகவல், நூற்பா, விருத்தம், இரட்டை ஆசிரிய விருத்தம் முதலிய யாப்பு வடிவங்களில் நீதியிலக்கியங்கள் இயற்றப்பட்டுள்ளன.

எனினும் மிகப்பல நீதிப்படைப்புகள் வெண்பா யாப்பிலேயே தோற்றம் பெற்று, வெண்பாவை நீதிநூல்களின் தனித்த யாப்பு வடிவம் என்றே கருதச் செய்துள்ளன.

**நீதிவெண்பா :**

நீதிக்கருத்துகளை வெண்பாயாப்பில் எடுத்துரைக்கும் நூல்கள் பல இருப்பினும், ஒரு நூல் ''நீதிவெண்பா'' எனும் பெயரையே பெற்றுள்ளது குறிப்பிடத்தக்கது. அந்நூலே இவண் ஒப்புமைப் பாடற்பகுதிகளைக் கொண்ட சிறப்புப் பதிப்பாக மலர்ந்துள்ளது. இந்நூலை இயற்றிய ஆசிரியர் பெயரை அறியக்கூடவில்லை. நூறுவெண்பாக்களையும் எளிய இனிய நடையமைதியையும் கொண்ட இந்நூல் பல்லோரையும் ஈர்க்கும் பாங்குடையது. இந்நூற் பாடல்களில் சில வடமொழி நீதி சுலோகங்களின் நேர் மொழிபெயர்ப்பாகவே காணப்படுகின்றன.

1931 இல் இந்நூலைப் பதிப்பித்தளித்த மதிப்பிற்குரிய கா. நமச்சிவாயர்,

> *''நீதிவெண்பா என்னும் இந்நூலை இயற்றிய ஆசிரியர் இன்னார் என்று விளங்கவில்லை. இவர் வட மொழியிலுள்ள ''நீதிசாஸ்திரம்'' என்னும்தொகைநூல்முதலானவற்றைக் கொண்டு இதனைச் செய்தனர் என்பது தெளிவாகின்றது. சில செய்யுட்கள் மொழிபெயர்ப்பாகவே காண்கின்றன.''*
>
> (ப.148)

என்று குறித்துள்ளமை இத்தொடர்பில் மனங்கொள்ளத்தக்கது.

**நீதிவெண்பாவின் காலம் :**

நீதிவெண்பா கி.பி.16 ஆம் நூற்றாண்டில் தோன்றிய படைப்பாகும்.

இதனை அறிஞர் மு. அருணாசலம் அவர்களின் பின்வரும் கருத்துரையால் தெளிவாக உணரலாம்.

''திருப்போரூர் சிதம்பர சுவாமிகள் தாம் சாந்தலிங்க சுவாமிகளின் 'கொலை மறுத்தல்' என்ற நூலுக்குச் செய்த உரையில், இதன் 80 ஆம் பாடலை மேற்கோள் காட்டுகிறார். இப்பாடல் நீதிசாரம் என்ற பெயர் சொல்லிக் காட்டப்பட்டுள்ளது; ஆனால் பாடல் நீதிவெண்பாவிலுள்ளது. (நீதிசாரம் விருத்த யாப்பால் ஆன நூல்). சுவாமிகள் காலமானது கி.பி.1659. அவர் காலமாவதற்குப் பல ஆண்டுகள் முன்னதாகவே அவ்வுரை எழுதியதாக வரலாறு ; உத்தேசம் 1645 இருக்கலாம். மேற்கோள் காட்டும் அளவு இந்நூலுக்கு அன்று பிரசித்தி ஏற்பட்டிருக்க வேண்டுமானால், 50-60 ஆண்டு முற்பட்டதென்று கொண்டாலும் கூட, நூலின் காலம் கி.பி.1590 ஆகிறது.

*(தமிழ் இலக்கிய வரலாறு – 16 ஆம் நூற்றாண்டு, பாகம் – 2, ப.74.)*

**நீதிவெண்பா - நூல்பற்றிய சில குறிப்புகள் :**

நீதிவெண்பா நூலைக் குறித்த நூலாசிரியரின் கூற்று, காப்புப் பாடலில் பின்வருமாறு இடம்பெற்றுள்ளது :

''மூதுணர்ந்தோர் ஓதுசில மூதுரையைப் பேதையேன்
நீதிவெண்பா வாக நிகழ்த்துவேன்''

• • •

**இந்நூல் உயரிய நீதிகள் பலவற்றை எடுத்துரைக்கின்றது. அவற்றுள் சில :**

"நல்லோர்கள் எங்கே பிறந்தாலும் என்" [1]

"சத்தியத்தை வெல்லாது அசத்தியம்" [53]

"நலிந்தாலும் உத்தமர்பால் நற்குணமே தோன்றும்" [64]

"கலை கற்றோர்க்கு அழகு கருணை" [66]

"தீயவர்பாற் கல்வி சிறந்தாலும் மற்றவரைத்
தூயவர்என் றெண்ணியே துன்னற்க!" [71]

"கல்வி நேசர்க்கு இலை சுகமும் நித்திரையும்" [73]

• • •

**நீதிவெண்பாப் பாடல்களில் இடம்பெற்றுள்ள கதைகள் :**

வேதியனைக் காத்த வேடன் கதை [3]

வேந்தனைக் குரங்கு கொன்ற கதை [3]

கீரிப்பிள்ளையைப் பார்ப்பனத்தி கொன்ற கதை [16]

ஏரண்ட மாமுனி சோழனொடு நீரில் வீழ்ந்திறந்த கதை [67]

காக்கைக்கு இடம்கொடுத்துத் துன்புற்ற அன்னத்தின் கதை [74]

• • •

**நீதிவெண்பாப் பாடல்கள் பெண்ணை முன்னிலைப்படுத்தி நீதிகூறும் உத்தியைக்கொண்டு இயற்றப்பட்டுள்ளன. நீதிவெண்பாப் பாடல்களுள் இடம்பெற்றுள்ள மகடூஉ முன்னிலை**

**மொழிகளுள் சில :**

ஏந்திழையே ! [6]
தோகையே ! [19]
காரிகையே ! [23]
மானே ! [27]
பேதையே ! [31]
கோதையே ! [47]
ஓவியமே ! [63]
பொன்னனையாய் ! [65]
அன்னமனையாய் ! [66]
முத்தனையாய் ! [68]
முற்றிழையே ! [90]
மெல்லிநல்லாய் ! [97]

• • •

**பெண்பழிப்புக் கருத்துகளையும், வேசையரைக் கடியும் கருத்துகளையும் இந்நூற் பாடல்கள் பல கொண்டுள்ளன.**

**(எ-டு.)** *'கலியுகத்தில் வீடுதொறும் கூற்றுவனாமே!' (32)*

• • •

**நீதிவெண்பாவை இயற்றிய புலவர் அழுத்தமான சைவநெறியினர். நீதிவெண்பாப் பாடல்கள் பல சைவநெறிக் கருத்துகளை எடுத்துரைக்கின்றன.**

**(எ-டு.)**

'சங்கரனைப் பூசிப்பதென்றே புகல்' [51]
'அரன்பாதம் பூசித்தல்' [52]
'பஞ்சேந்திரியம் சிவயோகியைப் பிணியா' [56]
'சிவன் அன்பர்' [63]
'சிவயோகி' [68,69]
'புரமெரித்த அண்ணல்' [78]
'சீராம் வெண்ணீற்றுத் திரிபுண்டரம்' [95]
'அரனன்பர்' [96]
'ஆமந்திரம் எவையும் ஐந்தெழுத்தை ஒவ்வா' [97]
'சோமசுந்தரர்' [97]

• • •

உவமைகளும் உருவகங்களும் பழமொழிகளும் இந்நூற்பாடல்களில் இடம்பெற்றுள்ளன.

இடம்பெற்றுள்ள பழமொழிகளுள் ஒன்று :

*"பனைமரத்தின் கீழே நின்று*
*பால்குடித்தாலும் பாலென்பரோ!"* *(79)*

• • •

சைவப் பனுவலின் - தமிழ்ப்பாடலின் உயர்வை இந்நூலின் பாடலடி ஒன்று குறிப்பிடுதல் நாம் மனங்கொள்ளத்தக்கதாகும்:

*"நால்வரெனும் நல்லஅன்பர் சொற்கொவ்வா*
*நான்மறைகள்"* *(97)*

இந்நூலின் பாடல்களில் குறிக்கப்பெறும் தெய்வங்கள், புராண மாந்தர் பெயர்கள் வருமாறு :

| | |
|---|---|
| இரேணுகை | [32] |
| சானகி | [32] |
| திரௌபதி | [32] |
| சங்கரன் | [51] |
| தாமோதரன் | [51] |
| பூமேலோர் | [51] |
| கண்ணன் | [53] |

• • •

இந்நூலின் பாக்கள் பல அருந்தமிழ்ச் சொற்களைக் கொண்டு திகழுகின்ற போதிலும் பல வடசொற்களையும் தம்மகத்தே கொண்டுள்ளன.

**அவற்றுள் சில :**

| | |
|---|---|
| உதரம் | [காப்பு] |
| கர்த்தபம் | [2] |
| அரிமந்திரம் | [2] |
| சகம் | [4] |
| யோகி | [9] |
| ரோகி | [9] |
| போகி | [9] |
| அநந்தம் | [10] |
| அகில லோகம் | [12] |
| விடம் | [18] |
| துற்சனர் | [18] |
| ஞானம் ஆசாரம் | [25] |
| பூச்சியம் | [28] |
| செபத்தோர் | [44] |
| நேத்திரம் | [50] |
| மாதா | [61] |
| இதமகிதம் | [67] |
| விரத்தி | [72] |
| வைராக்கியம் | [72] |
| விவேகம் | [72] |
| ஆலிங்கனம் | [84] |
| உத்தமன் | [90] |
| மத்திமன் | [90] |
| அதமன் | [90] |
| சந்திரோதயம் | [96] |

• • •

**பாவேந்தரைக் கவர்ந்த பாடல் :**

நீதிவெண்பாவின் 'அன்னை தயையும்'எனத் தொடங்கும் பாடல் (30) பெண்ணின் இலக்கணத்தை மரபுவழிப் பார்வையில் தருவதாகும். இப்பாடல் பாவேந்தர் பாரதிதாசனைக் கவர்ந்தது.

விளைவு : இப்பாடலின் கருத்தை ஏற்று அவர் 'இன்பம் அனைத்தும்' எனும் பாடலைப் படைத்தளித்துள்ளார். அப்பாடல், ''பாரதிதாசன் கவிதைகள் - நான்காம் தொகுதி'' யில் இடம்பெற்றுள்ளது.

**பாடவேறுபாடுகள் :**

நீதிவெண்பாச் சுவடிகளையும் அச்சு நூல்களையும் மேலெழுந்தவாரியாக நோக்கும்போதே, குறிப்பிடத்தக்க பாடவேறுபாடுகள் காணப்படுகின்றமையை அறியமுடிகிறது. இப்பதிப்பில் அப்பாடவேறுபாடுகள் அனைத்தையும் அடைவுசெய்து அளிக்கும் முயற்சி மேற்கொள்ளப்படவில்லை. எதிர்வரும் பதிப்பில் அதனை மேற்கொள்ளும் எண்ணம் இப் பதிப்பாசிரியனுக்கு உண்டு.

விதந்து குறிப்பிடத்தக்க பாடவேறுபாடுகள் நீதிவெண்பாப் பாடல்களுக்குக் காணப்படுகின்றமையைப் பருக்கைப் பதமாக இவண் காணலாம்.

1. பரவலாக அறியப்பெறும் சுவடி, அச்சுநூற் பாடம் :

அரிமந் திரம்புகுந்தால் ஆனை மருப்பும்
பெருகொளிசேர் முத்தும் பெறலாம் - நரிநுழையில்
வாலும் சிறிய மயிர்எலும்பும் கர்த்தபத்தின்
தோலுமல்லாமல் வேறுமுண்டோ சொல்.

(பா.2)

அரசினர் கீழ்த்திசைச் சுவடி நூலகத்தில் இடம்பெற்றுள்ள ஒரு சுவடி காட்டும் பாடம் :

அரிமந் திரம்புகுந்தால் ஆனை மருப்பும்
பெருகொளிசேர் முத்தும் பெறலாம் - நரிபுழையில்
வாலுஞ் சிறிய மறியெலும்பும் கத்தபத்தின்
தோலுமல்லால் வேறுமுண்டோ சொல்.

*(சுவடி எண்: டி.2283, முனைவர் பூ. சுப்பிரமணியம் எடுத்துக்காட்டியமை, **சுவடியியல்**, ப.106)*

**நீதிவெண்பா - முற்பதிப்புகள் :**

ஏறத்தாழ இன்றைக்கு முந்நூறு ஆண்டுகளுக்கு முன்னரே இந்நூல் அயல்நாட்டார் ஒருவரை ஈர்த்துள்ளது. விளைவு: அவ்வயல்நாட்டார் இந்நூலைப் பயின்று மகிழ்ந்ததோடு அமையாது, இந்நூலைச் செருமானிய மொழியில் மொழிபெயர்த்தார்.

ஆம். கி.பி.1708 ஆம் ஆண்டில் பெருந்தகை சீகன்பால்கு அவர்கள் செருமானிய மொழியில் இந்நூலை மொழிபெயர்த்தார். சீகன்பால்கு அவர்களின் இம் முன்னோடி முயற்சி குறிப்பிடத்தக்கது.

"....பர்தலோமேயாய்ஸ் ஸீகன்பால்க் (1682-1719), யொகன் ஃபிலிப் ஃபப்ரீஸியுஸ் (1711 - 1791) போன்ற ஜெர்மானிய மிஷனரிக்காரர்களும் மற்றும் சிலரும் செய்த தொடக்க கால முயற்சிகள் தமிழ்க் கல்வித்துறைக்குப் பல நன்மைகளைத் தேடிக் கொடுத்தன."

(ஜெர்மானிய இந்திய இயல் அன்றும் இன்றும், ப.7)

என்னும் கருத்துரை இம் முந்துமுயற்சி முதலியவற்றை மனங்கொண்டு வெளிப்பட்டதே.

சீகன்பால்கு அவர்களின் 'நீதிவெண்பா' மொழிபெயர்ப்பு முயற்சியை, பிரிஜ்ராஜ் சிங் எழுதிய ஆங்கில நூல் விளக்கமாக எடுத்துரைப்பதை இவண் காணலாம்.

"It is in the context of commending the high ethical tone of Hindu life to Europe that his translations and transliterations of three Tamil poems are to be seen. Between 30 August and 4 September 1708, just a month before he began his translation of the New Testament into Tamil, Ziegenbalg transliterated into Roman script and provided translations in German together with introductions and commentary of **Needi Vemba** (which he transliterates as Nidi Wumpa), Kondrei Venden and Ulaga Needi (Kleinere Schriften, Passim) taken together, they constitute a detailed scheme of Hindu religious belief and moral life."

(P.78, 79)

"Translations into German of **Needi Vemba** (30 August 1708), Ulaga Needi (3 September 1708) and Kondrei Venden (4 September 1708), three Tamil texts dealing with moral questions. Published in Ziegenbalg's kleinere schriften, ed. w. Caland (Amsterdam 1930)" (the First protestant missionary to India Bartholomaeus Ziegenbalg 1683 - 1719 A.D., P.167)

பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியிலும் இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்திலும் 'நீதிவெண்பா' பல பதிப்புகளைப் பெற்றது.

காஞ்சிபுரம் சபாபதி முதலியார், பொன்னம்பல பிள்ளை, கா. நமச்சிவாயர், தி.சு. இளவழகனார் முதலிய பல்லோரின் கைவண்ணத்தில் நற்பதிப்புகள் பல தோன்றின. இக்காலத்திலும் தோன்றிக்கொண்டிருக்கின்றன. நீதிவெண்பா மூலம் உரையுடன் பதிப்பிக்கப்பெறும் நிலை ஒருபுறம்; நீதிவெண்பா ஆங்கில மொழி பெயர்ப்புகளுடன் பதிப்பிக்கப்பெறும் நிலை இன்னொருபுறம்.

டி.பி. கிருஷ்ணசாமி, சு.ந. சொக்கலிங்கம் முதலியோரின் ஆங்கில மொழிபெயர்ப்புகளுடன் 'நீதிவெண்பா' பதிப்புகள் வெளிவந்துள்ளன. தற்போது தஞ்சையிலிருந்து வெளிவரும் - முனைவர் எஸ். இராமன் அவர்கள் ஆசிரியராக இருந்து நடத்தும் "The Scholar Miscellanist" எனும் மாத இதழில் 'நீதிவெண்பா' மூலமும் ஆங்கில மொழியாக்கமும் தொடர்ந்து வெளிவந்து கொண்டிருத்தல் குறிப்பிடத்தக்கது. இம்மொழிபெயர்ப்பை எழிலுற ஆக்கியுள்ளவர் பேராசிரியர் முனைவர் அ. தட்சிணாமூர்த்தி அவர்களாவார்.

**இப்பதிப்பின் இயல்பு :**

சரசுவதி மகால் நூலகத்தில் இடம்பெற்றுள்ள சுவடியின் அடிப்படையிலும் முற்பதிப்புகளின் துணையோடும் இப்பதிப்பு உருவாக்கப்பட்டுள்ளது.

நீதிவெண்பாப் பாடல்களைக் கருத்தாலும் அமைப்பாலும் உவமை முதலியவற்றாலும் ஒத்துத்திகழும் பாடல்களைப் பல்வேறு

நூல்களினின்று திரட்டி ஒப்புமையாகக் காட்டியுள்ளமை இப்பதிப்பின் தனிச்சிறப்பாகும்.

இளவழகனார் உரைப்பதிப்பு, பாடல்களுக்கு அருஞ்சொற்பொருள் கூறல், கதைவிளக்கங் கூறல் ஆகியவற்றுக்கு இப்பதிப்பின்போது முன்னோடிநிலையில் பார்வையிட்டுப் பயன்படுத்தப்பெற்றது.

நீதிவெண்பாவின் 69 ஆம் பாடலுக்கான ஒப்புமையாக,

"பாலருடன் உன்மத்தர் பிசாசர்குணம் மருவிப்
பாடலினொ டாடலிவை பயின்றிடினும் பயில்வர்"

எனும் பாடலடிகள், இளவழகனார் உரைப்பதிப்பிலிருந்து இப்பதிப்பில் எடுத்தாளப்பெற்றுள்ளது. அம் முற்பதிப்பில் அப்பாடலடிகள் சிவஞானசித்தியாரில் உள்ளதாகச் சுட்டப்பெற்றுள்ளது. ஒப்புமையைச் சரிபார்க்கையில், சிவஞான சித்தியாரில் அந்தப் பாடலடிகள் இல்லை என்பது தெரியவந்தது. அப்பாடலடிகள் எந்நூலில் இடம்பெற்றவை என்பதை அறிய இயலவில்லை.

நீதிவெண்பா குறித்த அறிஞர் மு. அருணாசலம் அவர்களின் கட்டுரை, அதன் அருமை கருதி இப்பதிப்பில் பிற்சேர்க்கையாகத் தரப்பட்டுள்ளது. பாடல் முதற்குறிப்பு அகரநிரல், தமிழில் காணப்பெறும் நீதிநூல்களின் பட்டியல் ஆகியனவும் பதிப்பின் ஈற்றில் இடம்பெற்றுள்ளன.

***நன்றியுரை :***

நீதிவெண்பாவின் அரிய சில முற்பதிப்புகளைப் பார்வையிட உதவிய அறிஞர்பெருந்தகை, உயர்திரு சேக்கிழார் அடிப்பொடி தி.ந. இராமச்சந்திரனார் அவர்களையும், சீகன்பால்கு செருமானிய மொழியில் மொழிபெயர்த்த நீதிவெண்பா நூலினைப் (1930 முதற்பதிப்பு) பார்வையிட உதவிய தமிழ்ப் பல்கலைக்கழகத்தின்

மேனாள் முதுநிலைத் துணைப்பதிவாளர், எழுத்தாளர், கவிஞர் திருமிகு. சுப்பராயலு அவர்களையும் இப்பதிப்பு நிறைவுறும் இவ்வேளையில் நன்றியுடன் நினைக்கிறேன்.

சரசுவதி மகால் நூலகச் சுவடிகள், முற்பதிப்புகள் ஆகியவற்றின் துணையோடு ஆக்கப்பெற்றுள்ள இப்பதிப்பு, நீதியிலக்கிய ஆர்வலர்களுக்குப் பயன்தரு பதிப்பாகும். இப்பதிப்பு உருவாக இசைவளித்த நூலக இயக்குநர் மற்றும் மாவட்ட ஆட்சித்தலைவர் பெருமதிப்பிற்குரிய திரு. சி. கோசலராமன், இ.ஆ.ப., அவர்களுக்கும், நூல் வெளியீட்டுக்கு ஆவன செய்த நிருவாக அலுவலர் திரு. சாமி. சிவஞானம் அவர்களுக்கும், வெளியீட்டு மேலாளர் திரு. அ. பஞ்சநாதன் அவர்களுக்கும், நூலை ஒளியச்சுக் கோப்பு மற்றும் ஒளியச்சு வழி உருவாக்கிய திரு. க. பத்மநாபன் அவர்களுக்கும் பதிப்பாசிரியனின் நன்றி இங்கே எழுத்தாலும் பதிவாகிறது.

தஞ்சாவூர்,
11.03.2002.

**ய. மணிகண்டன்.**



## காப்பு

**மூதுணர்ந்தோர் ஓதுசில மூதுரையைப் பேதையேன்**
**நீதிவெண்பா வாக நிகழ்த்துவேன் - ஆதிபரன்**
**வாமான் கருணை மணியுதரம் பூத்தமுதற்**
**கோமான் பெருங்கருணை கொண்டு.**

**அருஞ்சொற்பொருள் :** மூதுணர்ந்தோர் - உலக அனுபவங்களில் மூத்து உண்மைகளை உணர்ந்த பெரியோர். மூதுரை - நீதியுரை. பேதையேன் - அறிவற்ற நான் (அவையடக்கமாய் நூலாசிரியர் தன்னைக் குறித்துக் கூறிக்கொள்வது.) நிகழ்த்துவேன் - கூறுவேன். ஆதிபரன் - முழுமுதற்கடவுளாகிய சிவபெருமான். வாமான் - வாமம் மான் - இடப்பாகத்தில் உள்ள உமையம்மை. உதரம் - வயிறு. பூத்த - தோன்றிய. முதற்கோமான் - முதற்பிள்ளையாகிய விநாயகர்.

## நூல்

### 1.

**தாமரைபொன் முத்து சவரங்கோ ரோசனைபால்**
**பூமருதேன் பட்டுப் புனுகுசவ்வா - தாமழல்மற்(று)**
**எங்கே பிறந்தாலும் எள்ளாரே! நல்லோர்கள்**
**எங்கே பிறந்தாலும் என்.**

**அ -ள் :** சவரம் - சாமரை - கவரிமானின் மயிர் (மயிரால் அமைந்த அரச சின்னம்). கோரோசனை - பசுவின் வயிற்றினின்று எடுக்கப்பெறும் மஞ்சள்நிறமுள்ள மணப்பண்டம். புனுகு - புழுகு- ஒருவகைப் பூனையிடமிருந்து பெறப்படும் மணப்பொருள். என் - என்ன?

ஒப்புமை

சேற்றில் பிறந்திடும் கமலமலர் கடவுளது
திருமுடியின் மேலிருக்கும்
திகழ்சிப்பி யுடலில் சனித்தமுத் தரசரது
தேகத்தின் மேலிருக் கும்

போற்றியிடு பூச்சியின் வாயின்நூல் பட்டென்று
பூசைக்கு நேசமாகும்
புகலரிய வண்டெச்சி லானதேன் தேவர்கொள்
புனிதஅபி டேக மாகும்

சாற்றிய புலாலொடு பிறந்தகோ ரோசனை
சவாதுபுழு கனைவர்க்கு மாம்
சாதியீ னத்தில் பிறக்கினும் கற்றோர்கள்
சபையின்மேல் வட்ட மன்றோ

மாற்றிச் சுரத்தினை விபூதியால் உடல்குளிர
வைத்தமெய்ஞ் ஞான முதலே!
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே.

**குமரேச சதகம் - 59**

கள்ளி வயிற்றின் அகில்பிறக்கும்; மான்வயிற்று
ஒள்ளரி தாரம் பிறக்கும்; பெருங்கடலுள்
பல்விலைய முத்தம் பிறக்கும்; அறிவார்யார்
நல்ஆள் பிறக்கும் குடி?

**நான்மணிக்கடிகை - 4**

உன்னடியார் தாழ்குலத்தா ரேனுமுயர்ந் தோராவர்,
மின்னுமுத் துக்கவரி, வெண்பட்டுத், - துன்னுமலர்ப்
பங்கயம்,கோ ரோசனை, ச பாது, புழுகிவைகள்
எங்குப் பிறந்தாலும் என்?

**நீதிபோதவெண்பா - 49**

...

**2.**

**அரிமந் திரம்புகுந்தால் ஆனை மருப்பும்**
**பெருகொளிசேர் முத்தும் பெறலாம் - நரிநுழையில்**
**வாலும் சிறிய மயிர்எலும்பும் கர்த்தபத்தின்**
**தோலுமல்லால் வேறுமுண்டோ சொல்.**

**அ-ள் :** அரி - சிங்கம். மந்திரம் - குகை. ஆனை மருப்பு - யானைத் தந்தம். நரிநுழை - நரியின் இருப்பிடம். கர்த்தபம் - கழுதை.

ஒப்புமை

*காகத்து இருக்கைபுக் கால்என்பும்*
*ஊனும், கலுழன்வைகும்*
*மாகக் குடம்பை பணிமணி*
*யாவும் வழங்குவபோல்*
*மோகச் சிறியர் பெயர்தம்*
*பால்முயன்று ஏகுவதும்*
*மேகக் கரகம லச்செழி*
*யா! திரு வேங்கடமே!*

**செழியதரையன் நன்னெறி - 32**

...

**3.**

**அறிவன் பகையேனும் அன்புசேர் நட்பாம்**
**சிறுவன் பகையாம் செறிந்த - அறிவுடைய**
**வென்றி வனசரன்தான் வேதியனைக் காத்தான்முன்**
**கொன்றதொரு வேந்தைக் குரங்கு.**

**அ-ள் :** அறிவன் - அறிவுடையவன். சிறுவன் - அறிவில்லாதவன். வனசரன் - வேடன்.

**வேடன் கதை :** ''பார்ப்பான் ஒருவன் ஓர் அரசனிடத்தில் ஒரு மாணிக்க மணியைப் பெற்று, அதைக் கையில் வைத்துக்கொண்டால் திருடர்கள் பிடுங்கிக் கொள்வார்களென்று நினைத்து வாயிற்போட்டு விழுங்கிவிட்டான். பின்பொருகாற் கக்கி எடுத்துக்கொள்ளலாமென்பது அவன் எண்ணம். இதையறிந்த வேடன் ஒருவன், அந்தப் பார்ப்பான் தன் ஊருக்குப் போகும்பொழுது கூடவேபோய் நடுக் காட்டுவழியில் அவனை மடக்கி 'உன் வயிற்றிலிருக்கும் மாணிக்கத்தைக் கக்கு' என்றான். பார்ப்பான் 'மாணிக்கம் உன் வயிற்றில்தானே இருக்கிறது' என்று வேடனைக் கேட்டான். இவர்கள் இப்படிச் சண்டை போட்டுக்கொண்டு இருக்கும்பொழுது திருடர்கள் வந்து பார்ப்பானைப் பிடித்துக்கொண்டு மாணிக்கத்தைக் கக்கச் சொன்னார்கள். வேடன் அறிவுள்ளவன் ஆதலால், அவன் பகைவனானாலும் அந்தப் பார்ப்பானிடத்தில் அன்பும் இரக்கமுங் கொண்டு, அவன் உயிரைக் காப்பாற்ற எண்ணித் திருடர்களைப் பார்த்து, ''ஐயா, நாங்கள் வேடிக்கைக்குப் பேசிக்கொண்டோம். வயிற்றிலா மாணிக்கம் இருக்கும்! வேண்டுமானால் என் வயிற்றைக் கீறிப்பாருங்கள்'' என்றான். திருடர்கள் வேடன் வயிற்றைக் கீறிப்பார்த்து மாணிக்கம் இல்லாதது கண்டு, 'ஆ, இவனை வீணாகக் கொன்றுவிட்டோமே, இந்தப் பார்ப்பானையாவது விட்டுவிடுவோம்' என்றெண்ணி அவனை விட்டு விட்டார்கள். பார்ப்பான் உயிர் பிழைத்தான். பார்ப்பானுக்கு வேடன் முதலிற் பகைவனாயிருந்தாலும், அவன் அறிவுடையவனாதலால், 'அன்பு சேர் நட்பையே' கொண்டான்.

**குரங்கின் கதை :** அரசன் ஒருவன் தான் வளர்த்து வந்த குரங்கினிடத்திற் கத்தியைக் கொடுத்து, 'இங்கு யாரும் வராமற் பார்த்துக்கொள்' என்று சொல்லித் திட்டம் செய்துவிட்டுப்

படுத்துக் கொண்டான். அவன் தூங்கும்பொழுது அவன் மேலே ஓர் ஈ வந்து உட்கார்ந்தது. அறிவில்லாத அக்குரங்கு பார்த்தது. அரசன் இந்த ஈயைக் கொல்லத்தான் கத்தியைக் கொடுத்தான் என்று நினைத்து அந்த ஈயைக் கொல்லப் போயிற்று. ஈ பறந்து விட்டது. அரசன் இரு துண்டாக வெட்டுண்டான். அரசனுக்குக் குரங்கு நட்பானாலும் அறிவில்லாமையாற் பகைவன்போல் ஆகிவிட்டது.

**நீதிவெண்பா இளவழகனார் உரை.ப.7,8.**

...

**4.**

**மென்மதுர வாக்கால் விரும்பும் சகம்; கடின**
**வன்மொழியி னால்இகழும் மண்ணுலகம்! - நன்மொழியை**
**ஓதுகுயில் ஏ(து)அங்(கு) உதவியது கர்த்தபம்தான்**
**ஏ(து) அபரா தம்செய்த(து) இன்று.**

**அ-ள் :** மதுரம் - இனிமை. சகம் - உலகம். கர்த்தபம் - கழுதை. அபராதம் - கெடுதி.

...

**5.**

**பகைசேரும் எண்ணான்கு பற்கொண்டே நன்னா**
**வகைசேர் சுவையருந்து மாபோல் - தொகைசேர்**
**பகைவரிடம் மெய்யன்பு பாவித்(து) அவரால்**
**சுகமுறுதல் நல்லோர் தொழில்.**

**அ-ள் :** எண்ணான்கு - முப்பத்திரண்டு. நன்னா - நல் நா.

ஒப்புமை

ஆதிநாட் பகைஞர் தன்பால்
அருங்கரு மங்கள் வேண்டில்
நீதியாஞ் சுத்த மாக
நேயமாய்க் கொண்டு வுற்ற
சோதியாங் கரும மாகச்
சேர்ந்தமுற் பகையைத் தானே
யேதினாற் றுடங்க லாமோ
வப்படி யிசைந்து கொள்வார்.

**நீதிசாரம் - 41.**

...

6.

**காந்தன்இல் லாத கனங்குழலாள் பொற்பவமாம்**
**சாந்தகுணம் இல்லார் தவம்அவமாம் - ஏந்திழையே !**
**அன்னையில்லாப் பிள்ளை இருப்ப(து) அவம்அவமே**
**துன்னெயிறில் லாரூண் சுவை.**

**அ-ள் :** காந்தன் - கணவன். கனங்குழலாள் - பெண். பொற்பு - அழகு. அவம் - வீண். சாந்தகுணம் - பொறுமைக்குணம். ஏந்திழை - பெண். துன் - நெருக்கமான. எயிறு - பற்கள். ஊண்சுவை - உணவின்சுவை.

ஒப்புமை

கொழுந னில் லாத மடவார் .......................
...............இவைதம்மி னேதுபல னுண்டுகண்டாய்.

**அறப்பளீசுர சதகம் - 10.**

பதியிலார் அழகும் பாழே!

வீரமார்த்தாண்ட தேவரின் பஞ்சதந்திரப்பாடல்,
**சுகிர்லாபம் - 89**

- இன்னாத
நாளல்லா நாட்பூத்த நன்மலரும் போலுமே
ஆளில்லா மங்கைக்(கு) அழகு.

**மூதுரை - 3**

...

7.

**வருந்தவளை வேய்அரசர் மாமுடியின் மேலாம்**
**வருத்த வளையாத மூங்கில் - தரித்திரமாய்**
**வேழம்பர் கைப்புகுந்து மேதினியெல் லாம்திரிந்து**
**தாழுமவர் தம்அடிக்கீழ்த் தான்.**

**அ-ள்:** வருத்த - வளைத்து வருத்தப்படுத்த. வேய் - மூங்கில். மாமுடி - பெருமைமிகு தலைமுடி. வேழம்பர் - கழைக் கூத்தாடிகள். மேதினி - உலகம்.

...

8.

**நொய்தாம் திரணத்தின் நொய்தாகும் வெண்பஞ்சின்**
**நொய்தாம் இரப்போன் நுவலுங்கால் - நொய்யசிறு**
**பஞ்சுதனின் நொய்யானைப் பற்றாதோ காற்றணுக**
**அஞ்சுமவன் கேட்ப(து) அறிந்து.**

**அ-ள் :** நொய்து - சிறியது. திரணம் - துரும்பு. இரப்போன் - பிச்சையெடுப்பவன். நுவலுங்கால் - சொல்லுங்கால். பற்றாதோ - பற்ற அடித்துக்கொண்டு போகாதோ.

**ஒப்புமை**

*நீர்நுழை யாவி டத்தில்*
*நெய்புகும் நெய்போ லென்று*
*மோர்நுழை யாவி டத்திற்*
*பால்புகும் பால்போ லென்றும்*
*பேர்நுழை யாவி டத்திற்*
*புகைபுகும் புகைபோ லென்றும்*
*சீர்நுழை யாவி டத்தில்*
*தரித்திரன் நுழைவா னென்றே.*

**நீதிசாரம் - 91.**

...

**9.**

**ஒருபோது யோகியே ஒண்டளிர்க்கை மாதே!**
**இருபோது போகியே என்ப - திரிபோது**
**ரோகியே நான்குபோ(து) உண்பான் உடல்விட்டுப்**
**போகியே என்று புகல்.**

**அ-ள்:** ஒருபோது - ஒருவேளை உண்பவர். இருபோது - இருவேளை உண்பவர். திரிபோது - மூன்றுவேளை உண்பவர். யோகி - தவச்சீலர். போகி - உலக இன்பங்களை நுகர்பவர். ரோகி - நோயாளி. போகியே - போகக்கூடியவனே!

...

## 10.

**கண்ணிரண்டே யாவர்க்கும் கற்றோர்க்கு மூன்றுவிழி**
**எண்ணுவிழி ஏழாகும் ஈவோர்க்கு - நண்ணும்**
**அநந்தம் தவத்தால் அருள்ஞானம் பெற்றோர்க்(கு)**
**அநந்தம் விழியென்(று) அறி.**

**அ-ள்:** அநந்தம் - எல்லையற்ற. அநந்தம் விழி - கணக்கிலாக் கண்கள். கற்றவர்க்கு அறிவுக்கண் சேர மூன்றுவிழியாம். ஈவோர் - கொடையாளி. விழி ஏழு - கொடையாளர்தம் நகக்கண்கள் ஐந்தும் சேர விழிகள் ஏழாம்.

...

## 11.

**உற்றபெருஞ் சுற்றம் உறநன் மனைவியுடன்**
**பற்றிமிக வாழ்க பகவின்வால் - பற்றி**
**நதிகடத்த லன்றியே நாயின்வால் பற்றி**
**நதிகடத்தல் உண்டோ நவில்.**

**அ-ள்:** சுற்றம் - சுற்றத்தார், உறவினர். நவில் - சொல்க!

ஒப்புமை

அண்டிவரு முற்றார் பசித்தங் கிருக்கவே
அன்னியர்க் குதவு வோரும்
ஆசுதபு பெரியோர்செய் நேசத்தை விட்டுப்பின்
அற்பரை அடுத்த பேரும்

கொண்டவொரு மனையா ளிருக்கப் பரத்தையைக்
கொண்டாடி மருவு வோரும்
கூறுசற் பாத்திர மிருக்கமிகு தானமது
குணமிலார்க் கீந்த பேரும்

கண்டுவரு புதியோரை நம்பியே பழையரைக்
கைவிட் டிருந்த பேரும்
கரிவாலை விட்டுநரி வால்பற்றி நதிநீர்
கடக்கின்ற மரியாதை காண்

வண்டடர் கடப்பமலர் மாலிகா பரணமணி
மார்பனே! அருளாள னே!
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே.

**குமரேச சதகம் - 95.**

திண்டாட வெட்டும் ரணகளத்
திற்செயங் கொள்ளும்வலி
கண்டா லெதிர்நிற்பர் கூளப்
படையைக்கைக் கொண்டுபுகார்
அண்டாத வெள்ளத்தில் ஓடங்கொ
ளாமல் அடுநரிவால்
கொண்டாறு தாண்டுவ ரோவச்சு
தாநந்த கோவிந்தனே!

**கோவிந்த சதகம் - 82.**

**பாடவேறுபாடு 1: 3 ஒழியா.**

...

## 12.

**ஆசைக் கடியான் அகிலலோ கத்தினுக்கும்**
**ஆசற்ற நல்லடியான் ஆவானே - ஆசை**
**தனையடிமை கொண்டவனே தப்பா(து) உலகம்**
**தனையடிமை கொண்டவனே தான்.**

**அ-ள் :** அகில லோகம் - எல்லா உலகங்களுக்கும், ஆசற்ற - குற்றமற்ற. அடியான் - அடிமைப்பட்டுக் கிடப்பவன்.

ஒப்புமை

*அவாஇல்லார்க்(கு) இல்லாகுந் துன்பம்அஃது உண்டேல்*
*தவாஅது மேன்மேல் வரும்.*

*இன்பம் இடையறாது ஈண்டும் அவாஎன்னும்*
*துன்பத்துள் துன்பம் கெடின்.*

**திருக்குறள் - 368, 369.**

...

## 13.

**ஆனந் தணர்மகளிர் அன்பாங் குழந்தைவதை**
**மானந் தரும்பிசி வார்த்தையிவை - மேனிரையே**
**கூறவரு பாவங் குறையாதொவ் வொன்றுக்கு**
**நூறதிகம் என்றே நுவல்.**

**அ-ள் :** ஆன் - பசு, வதை - கொலை, மானம் தரும் பிசி வார்த்தை - இழிவு தரும் பொய்யுரை, மேல் நிரையே - மேல் வரிசையாக, நுவல் - சொல்க.

ஆன்முலை யறுத்த அறனி லோர்க்கும்
மாணிழை மகளிர் கருச்சிதைத் தோர்க்கும்
பார்ப்பார்த் தப்பிய கொடுமை யோர்க்கும்
வழுவாய் மருங்கிற் கழுவாயு முளவென
நிலம்புடை பெயர்வ தாயினு மொருவன்
செய்தி கொன்றோர்க் குய்தி யில்லென
அறம்பா டிற்றே ஆயிழை கணவ ...

**புறநானூறு 34**

பாய்எரி இந்தப் பதியூட்டப் பண்டேஓர்
ஏவல் உடையேனால் யார்பிழைப்பார் ஈங்(கு) என்னப்
பார்ப்பார் அறவோர் பசுப்பத் தினிப்பெண்டிர்
மூத்தோர் குழவி எனும்இவரைக் கைவிட்டுத்
தீத்திறத்தார் பக்கமே சேர்கென்று காய்த்திய
பொற்றொடி ஏவப் புகைஅழல் மண்டிற்றே
நல்தேரான் கூடல் நகர்.

**வஞ்சினமாலை 51 - 57**
**சிலப்பதிகாரம்**

'கொலைகளிற் கொடுமை சான்ற
பார்ப்பனக் கொலைவல் வீரக்
கொலைகருக் கொலைதாய் தந்தைக்
கொலைகனவக் கோட்டு நல்லான்
கொலைமுதற் பிறவு நீங்கும்'

**காஞ்சிப்புராணம்-சருவதீர்த்த.14**

எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகற்கு.

**திருக்குறள் - 110**

'பெரிய அறங்களைச் சிதைத்தலாவது ஆன்முலையறுத்தலும் மகளிர் கருவினைச் சிதைத்தலும் குரவர்த் தபுதலுமுதலிய பாதகங்களைச் செய்தல்'

**திருக்குறள் 110, பரிமேலழகர் உரை**

'சிதைவகல் காதல் தாயைத்
    தந்தையைக் குருவைத் தெய்வப்
பதவியந் தணரை ஆவைப்
    பாலரைப் பாவை மாரை
வதைபுரி குநர்க்கு முண்டா
    மாற்றலா மாற்றன் மாயா
உதவிகொன் றார்க்கென் றேனும்
    ஒழிக்கலாம் உபாயம் உண்டோ'

**கம்பராமாயணம் - கிட்கிந்தை.62.**

...

## 14.

**பெற்றமையும் என்னாப் பெரியோரும் பெற்றபொருள்
மற்றமையும் என்றே மகிழ்வேந்தும் - முற்றியநன்
மானமிலா இல்லாளும் மானமுறு வேசியரும்
ஈனம் உறுவார் இவர்.**

**அ-ள்:** பெற்றமையும் - பெற்ற இப்பொருள் போதும், அமையும் - போதும், மகிழ்வேந்து - மகிழும் அரசர், மானம் - வெட்கம், இல்லாள் - மனைவி, மானமுறு - வெட்கப்படும், ஈனம் - தாழ்வு.

ஒப்புமை

நிட்டூர மாக நிதிதேடு மன்னவனும்
இட்டதனை மெச்சா இரவலனும் - முட்டவே
கூசிநிலை நில்லாக் குலக்கொடியுங் கூசிய
வேசியுங் கெட்டு விடும்.

**ஔவையார் தனிப்பாடல் - 32**
**தனிப்பாடற்றிரட்டு - தொகுதி 1**

பெற்றதில் மகிழ்ச்சி கொள்ளாப்
பிராமண னெதுபெற் றாலும்
வைத்தது மகிழ்ச்சி கொண்ட
மன்னனும் பயந்தி லச்சை
உத்தித்து விருக்கு மந்த
வேசியு முயர்ந்த நாணம்
பத்தற்ற குலத்து மாது
நஷ்டமாம் பகருங் காலே.

**நீதி சாரம் - 92.**

திருப்தியில்லாத பிராமணனும் திருப்தியுள்ள க்ஷத்திரியனும் வெட்கமுள்ள வேசியும் வெட்கமற்ற குலஸ்திரீயும் கெடுவார்கள்.

**நீதி சாஸ்திரம் - 42.**

நாணும் பொதுமகளும் நாணாக் குலமகளும்
பூணு மகிழ்ச்சியுறாப் பூசுரனும் - பேணுதலாற்
கூடு மகிழ்ச்சியுறுங் கோமகனும் இவ்வுலகிற்
கேடுறுவ ரென்றே கிளத்து.

**சாணக்கிய நீதிவெண்பா- 56**

...

## 15.

**கற்றோர் கனமறிவர் கற்றாரே கற்றறியா**
**மற்றோர் அறியார் வருத்தமுறப் - பெற்றறியா**
**வந்தி பரிவாய் மகவைப் பெறுந்துயரம்**
**நொந்தறிகு வாளோ நுவல்.**

**அ-ள்:** கனம் - பெருமை. பெற்றறியா - குழந்தைபெற்று அறியாத. வந்தி - மலடி. மகவு - குழந்தை.

ஒப்புமை

லோகத்தில் மலடிகள் பிரசவவேதனையையறியாதது போலக் கல்லாதவர்கள் கற்றோருடைய பரிசிரமத்தை அறியார்கள்.

**நீதிசாஸ்திரம் - 105.**

விஞ்சையர் அருமை தன்னை
விஞ்சையர் அறிய வேணும்
புன்செயல் அறிவில் ஈனர்
புகழ்ந்ததை அறியார் என்போல்
விஞ்சிய மகப்பே றான
வேதனை மலடி தானும்
கிஞ்சிதம் அறியா ளென்போல்
இருந்திடுங் கேள்வி தானே.

**நீதிசாரம் - 21.**

...

## 16.

**செய்யில் ஒருகருமந் தேர்ந்து புரிவதன்றிச்**
**செய்யின் மனத்தாபஞ் சேருமே! - செய்யஒரு**
**நற்குடியைக் காத்த நகுலனைமுன் கொன்றமறைப்**
**பொற்கொடியைச் சேர்துயரம் போல்.**

**அ-ள்:** கருமம் - வேலை, செயல். தேர்ந்து - ஆராய்ந்து. மனத்தாபம் - துன்பம். நகுலன் - கீரிப்பிள்ளை. மறைப் பொற்கொடி - பிராமணப்பெண்.

**கதை:** 'குழந்தை யில்லையென்று ஒரு கீரிப்பிள்ளையை வளர்த்துவந்த பார்ப்பனி யொருத்திக்குச் சில நாட்கள் கழித்து மகப்பேறுண்டாயிற்று. குழந்தையைப் பெற்று மகிழ்ந்தாளாயினுங் கீரியின்பால் அன்பு தளர்ந்திலது. ஒருநாள் தன் குழந்தையைத் தொட்டிலிலிட்டுத் தூங்கவைத்துக் கீரியை அக்குழந்தைக்குக் காவலாக அருகு நிறுத்திப் பக்கல் இருந்ததொரு குளஞ்சென்று நீரெடுத்துத் திரும்பினள். இவள் திரும்புவதற்குள் தொட்டிலருகே ஒரு பாம்பு வந்தது; அது குழந்தையைக் கடித்துவிடாதபடி கீரிப்பிள்ளை அப்பாம்பைத் துண்டு துண்டாகக் கடித்துவிட்டது. அதனால் அதன் வாயெல்லாஞ் செந்நீர் பாய்ந்து சிவப்பாய்விட்டது. இதற்குள் பார்ப்பனி வீட்டுக்கருகே வந்ததுங் கீரி மகிழ்ந்து முன்னே ஓடிற்று. பார்ப்பனி ஆராயாமல், குழந்தையைத்தான் அது கடித்ததென்றெண்ணி, நீர்க்குடத்தைக் கீரிப்பிள்ளையின் தலைமேற் போட்டு அதனைக் கொன்றனள். பின்பு வீடுசேர்ந்து நடந்தது கண்டு கீரிப்பிள்ளையை நினைந்து, தான் ஆராயாது செய்துவிட்டமைக்கு ஏங்கி அவ்வேக்கத்தாலேயே உயிர்நீத்தனள்.

**நீதிவெண்பா - இளவழகனாருரை ப.21,22.**

நன்றிசெய் தாரென் றறியாமற்
　　　　றீங்கு நமக்குச்செய்தா
ரென்று செருக்கவொண் ணாது
　　　　குழந்தை யிளந்தசையைத்
தின்றெதிர் வந்தது கீரியென்
　　　　றந்தணன் தேவிமுன்னாள்
கொன்ற பழங்கதை யாயச்சு
　　　　தாநந்த கோவிந்தனே.

**கோவிந்த சதகம் - 43.**

பிள்ளை நகுலம் பெரும்பிறி தாக
எள்ளிய மனையோள் நினைந்துபின் செல்ல
வடதிசைப் பெயரும் மாமறை யாளன்
கடவ தன்றுநின் கைத்தூண் வாழ்க்கை
வடமொழி வாசகஞ் செய்த நல்லேடு
கடனறி மாந்தர் கைந்நீ கொடுக்கெனப்
பீடிகைத் தெருவிற் பெருங்குடி வாணிகர்
மாட மறுகின் மனைதொறு மறுகிக்
கருமக் கழிபலங் கொண்மி னோவெனும்
அருமறை யாட்டியை யணுகக் கூஉய்
யாதுநீ யுற்ற விடரீ தென்னென
மாதர்தா னுற்ற வான்றுயர் செப்பி
இப்பொரு ளெழுதிய விதழிது வாங்கிக்
கைப்பொருள் தந்தென் கடுந்துயர் களைகென
அஞ்ச லுன்ற னருந்துயர் களைகேன்
நெஞ்சுறு துயர நீங்குக வென்றாங்
கோத்துடை யந்தண ருரைநூற் கிடக்கையின்
தீத்திறம் புரிந்தோள் செய்துயர் நீங்கத்
தானஞ் செய்தவ டன்றுயர் நீக்கிக்

கானம் போன கணவனைக் கூட்டி
ஒல்காச் செல்வத் துறுபொருள் கொடுத்து
நல்வழிப் படுத்த செல்லாச் செல்வ

**(54 - 75)**

**அடைக்கலக் காதை, சிலப்பதிகாரம்**

'கீரிப்பிள்ளையைக் கொன்றது மறையோன்' எனும் மாற்றத்துடன் அக்கதை :

எழில்பெறு கௌட தேசம்
மன்னவன் றனக்கு நித்தம்
வந்துபஞ் சாங்கம் சொல்வோன்
தன்னது தேவி கர்ப்பம்
தரித்திலள் அதனால் கர்ப்பம்
என்னஓர் கீரி தன்னை
எடுத்தவர் வளர்த்தார் மன்னோ. *(4)*

புத்திர வாஞ்சை யாலே
புல்குவன்; மடிமேல் வைப்பன்;
முத்தமும் இட்டுக் கொள்வன்;
முந்தியே பாலும் சோறும்
துய்த்திட அளிப்பன்; மார்பில்
தூங்கவும் படுத்திக் கொள்வன்;
மெத்தவும் களித்து நெஞ்சில்
விருப்புடன் வளர்த்த பின்னர் *(5)*

மனையவள் யாக சேனி
வயிற்றினிற் கருப்பம் கண்டே *(6)*
.....................................
.....................................

யாக சேனி
யுடன்அவன் இருக்கும் நாளில்
தீதிலா முகூர்த்தந் தன்னில்
செல்வனும் பிறந்தான்; அந்தச்
சூதகம் கழிக்கும் நாள்ஓர்
சுனையினில் மூழ்கப் போனாள். (18)

ஆயிழை போகை யாலே
ஆரணம் முழுதும் வல்லோன்
சேயினைக் காத்தி ருந்தான்;
சிராத்தம்என் றரசன் தூதர்
'நீயவண் வருக!' என்றார்:
நேரமும் சென்று போனால்
போயதை எல்லாம் வேறு
புரோகிதர் கொண்டு போவார்' (19)

என்றுதன் மனத்தில் எண்ணி
இன்பமா வளர்த்த கீரி
தன்துணை ஆக அந்தத்
தனயனை வைத்து நீங்கிச்
சென்றனன்; அரசன் வீட்டில்
சிரார்த்தமும் முடித்துப் பெற்ற
பொன்துகில் அரிசி எல்லாம்
பொதிகளில் ஏற்றுக் கொண்டே (20)

வருமுனே சேயைக் கிட்டி
வந்ததோர் நாகம்; அந்தக்
கரியநா கத்தைக் கீரி
கடித்திரு துண்டம் ஆக்கிக்
குருதிவாய் எங்கும் ஆகக்
கொண்டுசந் தோடம் காட்ட
அருமறை யோன்முன் சென்ற(து);
'ஆ! கெடுத் தாயோ!' என்றே (21)

*தண்டினால் அடித்துக் கொன்றான்;*
*தளர்வொடு வீட்டில் வந்தான்;*
*கண்டனன் பிள்ளை; முன்னே*
*கரியபாம் போஇ ரண்டு*
*துண்டமாக் கடிக்கப் பட்டுத்*
*தூரவே கிடக்கக் கண்டான்;*
*மண்டிய துயர மாகி*
*வயிற்றினில் அடித்துக் கொண்டான்;* (22)

*வாயிலும் அடித்துக் கொண்டான்;*
*மண்ணையும் போட்டுக் கொண்டான்;*
*'சேயிலும் அதிக மான*
*சேயைநான் கொன்றேன் !' என்றான்;*
*'நீயெனக் கெதிரே வந்து*
*நின்றெனைக் கெடுத்தாய்' என்று*
*போயதன் மேல்வி ழுந்து*
*புரண்டுருண் டரற்றி னானே.* (23)

*'தேவியும் மூழ்கி வந்தாள்;*
*தேவசன் மாவை நோக்கி,*
*'பாவி ! இங் கேது கீரிப்*
*பாலகன் இறந்த தெ'ன்றே*
*ஓவென அலறி நின்றாள்;*
*உற்றவா றவனும் சொன்னான்;*
*காவிஅம் கண்ணி தானும்*
*கனல்இடு மெழுகொத் தாளே!* (24)

**வீரமார்த்தாண்டதேவரின் பஞ்சதந்திரப்பாடல்**
**'அசம்பிரேட்சிய காரித்துவம்'- 4 - 24**

**பாடவேறுபாடு 2:2. ஜயதன்**

...

17.

நாவின் நுனியில் நயமிருக்கிற் பூமாதும்
நாவினிய நல்லோரும் நண்ணுவார் - நாவினுனி
ஆங்க டினமாகில் அத்திருவுஞ் சேராள்முன்
ஆங்கே வருமரண மாம்.

**அ-ள்:** நயம் - இன்சொல். பூமாது - திருமகள். திரு - திருமகள்.

...

18.

ஈக்கு விடம்தலையில் எய்துமிருந் தேளுக்கு
வாய்த்த விடங்கொடுக்கில் வாழுமே - நோக்கரிய
பைங்கணர வுக்குவிடம் பல்லளவே துற்சனருக்(கு)
அங்கமுழு தும்விடமே ஆம்.

**அ-ள்:** பைங்கண் - . அரவு - பாம்பு. அங்கம் முழுதும் - உடல் உறுப்புகள் அனைத்திலும். விடம் - விஷம் - நஞ்சு.

ஒப்புமை

வாளுரகத் திற்கு வலியதலை யிற்கடுவாம்
தேளிற்கு வாலில்விடஞ் சேருமே - கோளர்களாம்
தீயுருவார் கீழ்கட்குத் தேகமெலாம் வெங்காளம்
ஏயுமென நன்மதியே யெண்.

**நன்மதி வெண்பா - 54.**

*தேளுக்குக் கொடுக்கில் விஷம்; ஈக்குத் தலையில் விஷம்; பாம்புக்குப் பல்லில் விஷம்; துர்ஜநனுக்கு ஸர்வாங்கங்களிலும் விஷம்.*

**நீதிசாஸ்திரம் 68.**

திருடருக்கு விடமெலாம் கையிலே காமமிகு
　　தெரிவைக்கு விடமுலையிலே
　தீயபொய் யர்க்குவிடம் நாவிலே மதமுடன்
　　திரிவோர்க்கு விடம்நிதியிலே
கருதரிய கோளர்க்கு விடமுதடு தன்னிலே
　　காமுகர் விடங்கண்ணிலே
　கட்செவி விடங்கள்பல் லடியிலே தேட்கெனில்
　　கனவிடங் கடைவாலிலே
அரியதுஷ் டர்க்கென்னி லெட்டிமர மென்னவே
　　அங்கமெல் லாம்விடமதாம்
　அடுத்துக் கெடுத்திடும் பகைவர்விடம் மனதிலே
　　அம்பொன்விலை மாதருக்கு
மருவுவிடம் அல்குலில் தெரியவசம் அன்றுகாண்
　　மணவாள நாராயணன்
　மனதிலுறை யலர்மேலு மங்கைமண வாளனே
　　வரதவேங் கடராயனே.

**திருவேங்கட சதகம் - 34.**

...

**19.**

**துர்ச்சனரும் பாம்புந் துலையொக்கி னும்பாம்பு**
**துர்ச்சனரை ஒக்குமோ தோகையே! - துர்ச்சனர்தாம்**
**எந்தவிதத் தாலும் இணங்காரே பாம்புமணி**
**மந்திரத்தா லாமே வசம்.**

**அ-ள் :** துர்ச்சனர் - தீயோர். ஒக்கினும் - சமமாயினும். துலை - துலாக்கோல். இங்கே 'ஒரே அளவு' - 'சம அளவு' எனும் பொருளில் வந்தது. தோகை - பெண். மணிமந்திரம் -

ஒப்புமை

அரவுதுற் சனரிற் றீயோ
　　ராரெனில் அரவு தன்னிற்
பரவுதுற் சனனே தீயோன்
　　பாம்புமந் திரத்தால் நிற்கும்
திரள்மணி யதனால் நிற்குஞ்
　　சேர்ந்ததுற் சனன்றா னென்றும்
ஒருவர்யோ சனையுங் கேளா
　　னவன்கொடி. யோனென் றோதும்.

**நீதிசாரம் 95.**

சீறரவு மூர்க்கனுந் தீங்குபுரி வாரெனினுஞ்
சீறரவின் மூர்க்கனே தீயவன்காண் - சீறரவம்
மந்திரத்தாற் கைவசமா மூர்க்கன் வசமாதல்
எந்தவிதத் தாலு மிலை.

**சாணக்கிய நீதிவெண்பா - 23**

...

**20.**

**கொம்புளதற் கைந்து குதிரைக்குப் பத்துமுழம்**
**வெம்புகரிக் காயிரந்தான் வேண்டுமே ! - வம்புசெறி**
**தீங்கினர்தங் கண்ணில் தெரியாத தூரத்து**
**நீங்குவதே நல்ல நெறி.**

**அ-ள்:** கொம்புளதற்கு - கொம்பு உள்ள விலங்குகளுக்கு. வெம்பு கரிக்கு - சினங்கொள்ளக்கூடிய யானைக்கு. வம்புசெறி - தீமைகள் மிகுந்த.

ஒப்புமை

வண்டிக்கு முழமைந் தாகும்;
வாசிக்கும் அதுவே பத்தாம்;
கண்டுற்ற கரிக்குத் தானும்
ஆயிர முழங்காண் என்ப;
வண்டுற்ற குழலாய்! இந்த
வையகம் தன்னின் மீது
மிண்டுற்ற துர்ச்ச னன்தான்
இருக்குமூர் விட்டுப் போமே.

**நீதிசாரம் - 57.**

ஆனைக்கு நீங்குமுழ மாயிரமே கொம்புடைய
ஏனை விலங்குகளுக் கீரைந்தே - வானிமிரும்
வாசிக் கொருநூறே துர்ச்சனற்கு வைகுமிடம்
ஆசறவிட் டேக லழகு.

**சாணக்கிய நீதிவெண்பா - 25**

வண்டிக்கு ஐந்து முழ தூரமும், குதிரைக்குப் பத்துமுழ தூரமும், யானைக்கு நூறுமுழதூரமும் எருதுக்குப் பத்துமுழ தூரமும் விலகிச் செல்லல் வேண்டும்.

**சுக்கிர நீதி, மூன்றாம் அத்தியாயம் - சுலோக எண்:140**
**(பண்டிதமணியின் மொழிபெயர்ப்பு நூல்)**

வண்டிக்கு ஐந்துமுழமும், குதிரைக்குப் பத்துமுழமும், யானைக்கு ஆயிரமுழமும், துர்ஜநனுக்கு மிகவும் தூரமாயும் ஒதுங்கிப் போகவேண்டும்.

**நீதிசாஸ்திரம் - 53.**

...

## 21.

**அவ்விய நெஞ்சத் தறிவில்லாத் துர்ச்சனரைச்**
**செவ்விய ராக்குஞ் செயலுண்டோ - திவ்வியநற்**
**கந்தம் பலவும் கலந்தாலும் உள்ளியது**
**கந்தங் கெடுமோ கரை.**

**அ-ள்:** அவ்வியநெஞ்சம் - பொறாமைகொண்ட நெஞ்சம். துர்ச்சனர் - தீயவர். செவ்வியர் - சிறந்தவர், நல்லவர். திவ்விய - இனிய, உயர்ந்த. கந்தம் - மணப்பொருள். உள்ளி - வெள்ளைப்பூண்டு. கரை - சொல்க.

ஒப்புமை

கண்ணுறு கற்பூ ரத்தால்
புனுகுகஸ் தூரி யாலே
பண்ணியே சேறு செய்து
உள்ளியைப் புதைத்துப் பன்னீர்த்
தண்ணியாற் பயிர்செய் தாலுந்
தன்னாற்ற நீங்கா தேபோல்
நண்ணியெத் தனைசெய் தாலுந்
துற்சன னலத்த னாகான்.

**நீதிசாரம் 96.**

ஊட்டினும் பல்விரை உள்ளிகம ழாதே.

**வெற்றிவேற்கை.29.**

கறுப்பில்லாத உள்ளிக்கேன் பரிமளங்கள்

**இராமச்சந்திரக் கவிராயர் தனிப்பாடல் - 20**
**தனிப்பாடற்றிரட்டு - 1.**

வெண்மைதரு சீனி சொரிந்துபயிர் செய்யினும்
வெள்ளுள்ளி குணமாறுமோ?
.......................................
சற்குணமி லாதவர்க் கெத்தனை யுரைக்கினுஞ்
சண்டிக் குணம் போகுமோ?

**கயிலாசநாதர் சதகம் - 37**

மிகவும் செழுந்தேன் சொரிந்தே வளர்க்கினும்
வெள்ளுள்ளி நாற்றம் மாறா
சொல்லினுந் தங்கள் சுயகுணம் விடாமலே
யமைவுற்று வாழ்வர் சிலபேர்

**திருவேங்கட சதகம் - 91**

கற்பூரப் பாத்திகட்டிக் கத்தூரி எருப்போட்டுக்
கமழ்நீர் பாய்ச்சிப்
பொற்பூர உள்ளியினை விதைத்தாலும் அதன்குணத்தைப்
பொருந்தக் காட்டும் ;
சொற்பேதை யருக்கறிவிங் கினிதாக வருமெனவே
சொல்லி னாலும்
நற்போதம் வாராது அங்குஅவர்குணமே மேலாக
நடக்குந் தானே.

**விவேகசிந்தாமணி - 89**

...

**22.**

**துன்னும் இருமலுந் துர்ச்சனரும் ஒக்குமே**
**மன்னும் இனிமையான் மாறாகிப் - பன்னுங்**
**கடுவும் கடுநேர் கடுமொழியுங் கண்டாற்**
**கடுக வசமாகை யால்.**

**அ-ள் :** துன்னும் - மிகுதியாயிருக்கும். ஒக்கும் - சமம். மன்னும் - நிலைத்திருக்கும். கடு - நஞ்சு போன்ற கசப்பான மருந்து. கடுமொழி - கடுஞ்சொல். கடுக - விரைவாக.

...

**23.**

**செங்கமலப் போதலர்ந்த செவ்விபோ லும்வதனம்**
**தங்கு மொழிசந் தனம்போலும் - பங்கியெறி**
**கத்திரியைப் போலும்இளங் காரிகையே ! வஞ்சமனங்**
**குத்திரர்பால் மூன்று குணம்.**

**அ-ள் :** செங்கமலப் போது - செந்தாமரைப் பூ. அலர்ந்த - மலர்ந்த. செவ்வி - செம்மை. வதனம் - முகம். மொழி - பேச்சு. பங்கி - தலைமயிர். கத்திரி - கத்திரிக்கோல். இளங்காரிகை - இளம்பெண். குத்திரர் - வஞ்சகர். பால் - இடம்.

**★வேறு சில பாடங்களைக் கொண்டு வேறொரு நூலில் இடம்பெற்றுள்ள இதே பாடல்:**

செங்கமலப் போதலர்ந்த செவ்விபோ லும்வதனம்
தங்குமொழி சந்தனசீ தம்போலும் - அங்கியெரி
கத்திரியைப் போலுமாங் காரிகையே வஞ்சர்மனம்
குத்திரர்பால் மூன்று குணம்.

**சீர்காழி அருணாசலக் கவிராயர் பாடல் - 14.**
**தனிப்பாடற்றிரட்டு - தொகுதி 2.**

ஒப்புமை

துற்சனன் முகம தென்றுந்
துலங்கிய கமலம் போலும்
சற்சன னென்னும் வார்த்தை
சந்தனக் குளுமை போலும்
உற்றிடு மிதயந் தானும்
உரத்திடும் வயிரம் போலும்
முற்பெற விருக்கு மந்த
மூர்க்கர்தங் குணங்கள் தாமே.

**நீதிசாரம் 73.**

...

**24.**

**நீசனே நீசன் நினையுங்கால் சொல்தவறும்**
**நீசனே நீசன் அவனையே - நீசப்**
**புலையனாம் என்றுரைக்கும் புல்லியனே மேலாம்**
**புலையனா மென்றே புகல்.**

**அ-ள்:** புல்லியன் - தாழ்ந்த இயல்புடையவன். புகல் - சொல்க.

**பாடவேறுபாடு : 1:1, 2:2, நீசனோ.**

...

## 25.

**ஞானமா சாரம் நயவா ரிடைப்புகழும்**
**ஏனைநால் வேதம் இருக்குநெறி - தான்மொழியிற்**
**பாவநிறை சண்டாளர் பாண்டத்துக் கங்கைநீர்**
**மேவுநெறி யென்றே விடு.**

**அ-ள்:** ஞானம் - அறிவு. ஆசாரம் - ஒழுக்கம். நயவார் - விரும்பாதவர். மொழியிற் - சொன்னால். சண்டாளர் - இழிந்தவர்.

...

## 26.

**குணம்நன் குணராக் கொடியோ ரிடத்திற்**
**குணம்நன் குடையார் குறுகார் - குணமுடைமை**
**நண்ணாச் சமண நகரத்தில் தூசொலிக்கும்**
**வண்ணானுக் குண்டோ வழக்கு.**

**அ-ள் :** குறுகார் - சேரமாட்டார். சமண நகரத்தில் - சமண மதத்தவர் வாழ்கின்ற நகரத்தில். தூசு - ஆடை. தூசொலிக்கும் - அழுக்குடைகளை வெளுக்கும். உண்டோ வழக்கு - வழக்குண்டோ - இருப்பு உண்டா ?

**ஒப்புமை**

வஸ்திரத்தை உபயோகம் செய்யாத திகந்தரர்களான பௌத்தர்களுடைய தேசத்தில் வண்ணானுக்கு எப்படி தொழில் இல்லையோ அதுபோல் சமயோசிதமாகவும் மிகவும்

சாமர்த்தியமாகவும் பேசும் மனுஷ்யரின் வார்த்தைகளைக் கேட்கத் தகுந்தவர்கள் இல்லாவிடின் அவர்கள் சக்தி வீண்தான் என்றவாறு.

**நீதி சாஸ்திரம், பா.எ.229**

சொல்லாற் பிரசங்கஞ் சொல்வோ னதுகேட்போர்
இல்லா வவைக்களத்தி லென்செய்யும் - சொல்லாடை
நண்ணாத் துறவோர்கள் நண்ணும் பதியகத்து
வண்ணானுக் கென்ன வழக்கு.

**சாணக்கிய நீதிவெண்பா 83.**

...

**27.**

**ஆனை மருப்பும் அருங்கவரி மான்மயிருங்**
**கான வரியுகிரும் கற்றோரும் - மானே !**
**பிறந்தவிடத் தன்றிப் பிறிதொரு தேசத்தே**
**செறிந்தவிடத் தன்றோ சிறப்பு.**

**அ-ள் :** ஆனை மருப்பு - யானைத்தந்தம். கானவரி உகிர் - காட்டிலுள்ள புலியின் நகம். செறிந்த இடம் - சேர்ந்த இடம். மானே - மான் போன்ற விழிகளையுடைய பெண்ணே.

**ஒப்புமை**

மூற்கனி லளவு மட்டு
முயன்றிடுங் கிராம ணிக்கு
மேற்கின்றன் பதிக்கு மற்ற
விறைவனு மியங்கு மென்றுங்
காக்கின்ற புவிக்கு மேரைக்
கற்றவர் தேச மெங்கு
மாக்குநல் லிடங்க ளெல்லாம்
பூச்சிய னாவ னன்றே.

**நீதிசாரம் - 72.**

...

28.

**தலைமயிருங் கூருகிரும் வெண்பல்லுந் தத்தம்**
**நிலையுடைய மானவரும் நிற்கும் - நிலைதவறாத்**
**தானத்திற் பூச்சியமே சாரும் நிலைதவறுந்**
**தானத்திற் பூச்சியமோ தான்.**

**அ-ள் :** கூர் உகிர் - கூரிய நகம். மானவர் - மாமுடைய பெரியவர். தானம் - ஸ்தானம். பூச்சியம் - புகழ்.

ஒப்புமை

கேசமும் உகிரும் பல்லும்
கிளத்திய வேந்தும் தத்தம்
வாசமே இகழ்ந்து பின்னு
மறுத்துமோர் இடங்கள் செல்லில்
நேசமே யழிந்து யாரும்
இகழ்ச்சிசொல் லிடுவார் போலப்
பேசிய மாந்தர் தங்கள்
நிலைவிடின் பெருமை போகும்.

**நீதிசாரம் - 49.**

...

29.

**வென்றி வரியுகிரும் வெண்கவரி மான்மயிரும்**
**துன்றுமத யானைச் சுடர்மருப்பும் - நின்றநிலை**
**வேறுபடி னுஞ்சிறப்பாம் மெய்ஞ்ஞானி நின்றநிலை**
**வேறுபடி னுஞ்சிறப்பா மே.**

**அ-ள்:** வென்றி - வெற்றி. வரி - புலி. வரி உகிர் - புலி நகம். மருப்பு - தந்தம்.

**30.**

**அன்னை தயையும் அடியாள் பணியுமலர்ப்**
**பொன்னின் அழகும் புவிப்பொறையும் - வன்னமுலை**
**வேசி துயிலும் விறல்மந் திரிமதியும்**
**பேசில் இவையுடையாள் பெண்.**

**அ-ள் :** தயை - அன்பு. அடியாள் - வேலைக்காரி. பணியும் - பணிவும், தொண்டும். பொறை - பொறுமை. வன்னம் - அழகு. துயில் - துயிலின்பந் தரல். விறல் - வல்லமை. மந்திரிமதி - மந்திரியைப் போன்ற அறிவு.

ஒப்புமை

*அன்பிற்றாய்; ஏவற் கடிமை; பொறை யிற்பூ; மா*
*மின்பொற்பிற்; கின்பத்தில் வேசை; மதிக் -*
*கன்பமைச்சன்;*
*அன்னாள் பதிபின் அயின்றுதுயில் வாள்கற்பின்*
*மின்னாளாம் வேற்றெய்வ மே !*

**நீதிபோதவெண்பா - 16.**

*தாசிபோல் பணியில் புத்தி*
*தன்னிலே அமைச்சு போலும்*
*தேசினில் திருவு மூட்டுஞ்*
*சிநேகத்தில் அன்னை போலும்*
*மாசிலாப் பொறைக்குப் பூமா*
*தென்னவும் மருவு நாளில்*
*வேசிபோல் குணமி தாறும்*
*மிகுந்தகற் பினுக்கு நன்றே.*

**நீதிசாரம் - 51.**

பெண்கள் இட்ட பிச்சைதான் - ஆண்கள்
பெற்ற இன்பம் அனைத்தும் - அழகிய
பெண்கள் இட்ட பிச்சைதான்!
கண்ணைக் கவர்வார் எண்ணம் கவர்வார்
காதலால் இன்ப வாழ்வளித்திடும்
-பெண்கள் இட்ட பிச்சைதான்!

அன்னை தயைஉடையார் - பணிவினில்
அடியவர் போன்றார் - மலர்ப்
பொன்னின் அழகுடையார் - பொறுமையில்
பூமிக் கிணைஆவார்.

இன்பம் அளிப்பதில் தாசிகள் - அவர்
எண்ணம் அளிப்பதில் அமைச்சர்கள் - அழகிய
பெண்கள் இட்ட பிச்சைதான்!
கண்ணின் கடைப்பார்வை - ஒருசிறு
கட்டளை போட்டுவிட்டால்- இப்பெரு
மண்ணுலகின் ஆட்சி ஆண்கள்
வாங்குவோர் வாள்வீச்சு

பெண்களி னால்பண்கள் இலக்கியம் - அவர்
பேச்சுக்குத் தான்பெயர் அமிழ்தம் - அழகிய
- பெண்கள் இட்ட பிச்சைதான்!

**பாரதிதாசன் கவிதைகள் – நான்காம் தொகுதி ·**
**‘இன்பம் அனைத்தும்’**

வீட்டுவேலையில் பணிப்பெண் போலவும், காரியாலோசனையில் மந்திரி போலவும், ரூபத்தில் மகாலக்ஷ்மி போலவும் பொறுமையில் பூமிதேவி போலவும், படுக்கையில் வேசி போலவும், இவ்வாறு வகையாய்க் கணவன் விஷயத்தில் பிரவர்த்திப்பவள் குலஸ்திரீயாவாள்.

**நீதி சாஸ்திரம் 50**

...

## 31.

**பெண்ணொருத்தி பேசிற் பெரும்பூமி தானதிரும்**
**பெண்ணிருவர் பேசில்விழும் வான்மீன்கள் - பெண்மூவர்**
**பேசில் அலைசுவறும் பேதையே ! பெண்பலர்தாம்**
**பேசிலுல கென்னாமோ பின்?**

**அ-ள்:** வான்மீன்கள் - நட்சத்திரங்கள். சுவறும் - வற்றும்; சுண்டிவிடும். பேதை - பெண்.

...

## 32.

**என்னே ! கிரேதத் திரேணுகையே கூற்றுவனாம்**
**தன்னேர் திரேதத்தில் சானகியே - பின்யுகத்திற்**
**கூடுந் திரௌபதையே கூற்றாம் கலியுகத்தில்**
**வீடுதொறும் கூற்றுவனா மே.**

**அ-ள் :** கிரேதத்தில் - கிருத யுகத்தில். இரேணுகை - பரசுராமனின் தாய். கூற்றுவன் - எமன். திரேதத்தில் - திரேத யுகத்தில். சானகி - சீதை. பின் யுகத்தில் - துவாபர யுகத்தில்.

ஒப்புமை

*கலியுகத்தில் பிரம்மதேவனால் வீட்டுக்கு வீடு ஸ்திரீகளையே ம்ருத்யுவாக ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. ஆனால் இது ஸ்திரீகள் சாமான்யத்திற்குச் சொன்னதாதலால் சில ஸ்திரீகள் ஸாதுக்களாயும் இருப்பார்கள்.*

**நீதி சாஸ்திரம் 179.**

முந்தின யுகத்தில் ரேணு
முதிர்திரே தாயு கத்தில்
வந்திடுஞ் சீதை பின்னும்
வளர்துவா பரயு கத்தில்
சுந்தரஞ் சேரு மந்தத்
துரோபதை மூன்றுங் கூற்றாம்
அந்தமில் கலியு கத்தில்
அகத்தொரு கூற்றா மென்றே.

**நீதிசாரம் - 89.**

நன்மனை தோறும் பெண்களைப் படைத்து
நமனையும் என்செயப் படைத்தனையோ!

**விவேகசிந்தாமணி - 83.**

அயலூ ரவன்போக அம்மஞ்ச ளாடிக்
கயலேர்கண் ஆர எழுதிப் - புயலைம்பால்
வண்டோச்சி நின்றுலாம் வாளேர் தடங்கண்ணாள்
தண்டோச்சிப் பின்செல்லுங் கூற்று.

**அறநெறிச்சாரம் 163.**

**பாடவேறுபாடு 1:2,3 கிரேதத்தில் ரேணுகையே**
**3:2 துரோபதையே**

...

**33.**

**கர்ப்பூரம் போலக் கடலுப் பிருந்தாலும்**
**கர்ப்பூரம் ஆமோ கடலுப்பு - பொற்பூரும்**
**புண்ணியரைப் போல இருந்தாலும் புல்லியர்தாம்**
**புண்ணியரா வாரோ புகல்?**

**அ-ள் :** பொற்பூரும் - பொலிவுமிகும். புல்லியர் - தீயோர், தாழ்ந்தவர்.

ஒப்புமை

*உருவாலொன் றாயினும்நல் லோர்தமக்குப்*
*பொல்லோர்*
*சரியாவ ரோகடப்பந் தாரா ! - ஒருபெயர்கொள்*
*எப்பெரிய தேவருநிற்(கு) எத்திறத்தும் ஒப்பாரோ?*
*உப்புக்கற் பூரமொக்கு மோ?*

**நீதிபோதவெண்பா - 50.**

...

**34.**

**சீலமில்லான் ஏதேனுஞ் செப்பிடினும் தானந்தக்**
**காலம் இடமறிந்து கட்டுரைத்தே - ஏலவே**
**செப்புமவ னுந்தானே சிந்தைநோ காதகன்று**
**தப்புமவன் உத்தமனே தான்.**

**அ-ள்:** சீலம் - நல்லொழுக்கம். செப்பிடினும் - சொன்னாலும்.

...

**35.**

**சிற்றுணர்வோ ரென்றும் சிலுசிலுப்பர் ஆன்றமைந்த**
**முற்றுணர்வோ ரொன்றும் மொழியாரே - வெற்றிபெரும்**
**வெண்கலத்தின் ஓசை மிகுமே விரிபசும்பொன்**
**ஒண்கலத்தின் உண்டோ ஒலி.**

**அ-ள் :** சிலுசிலுப்பர் - சிடுசிடு எனப் பேசுவர். ஒண்கலம் - ஒளிவீசும் பாத்திரம்.

கற்றறிந்த நாவினார் சொல்லார்தம் சோர்வஞ்சி;
மற்றையர் ஆவார் பகர்வர்; - பனையின்மேல்
வற்றிய ஓலை கலகலக்கும்; எஞ்ஞான்றும்
பச்சோலைக் கில்லை ஒலி.

நாலடியார் - 256

**பாடவேறுபாடு 1:4 நன்றமைந்த**
**2:2 ரென்றும்**

...

**36.**

**உள்ளபொழு(து) ஏதும் உவந்தளிப்ப தல்லாலோர்**
**எள்ளளவும் ஈய இசையுமோ? - தெள்ளுதமிழ்ச்**
**சீரளித்தோன் உண்டநாள் சேர்மேகத் துக்கருந்த**
**நீரளித்த தோமுந்நீர் நின்று.**

**அ-ள் :** ஈய - கொடுக்க. முந்நீர் - கடல்.

...

**37.**

**பேதையரைக் கண்டால் பெரியோர் வழிவிலகி**
**நீதியொடு போதல் நெறியன்றோ? - காதுமத**
**மாகரத்த யானை வழிவிலகல் புன்மலந்தின்**
**சூகரத்துக்(கு) அஞ்சியோ சொல்.**

**அ-ள் :** பேதையர் - அறிவற்ற கீழோர். காதும் - கொல்லுகின்ற. மதம் - மதநீர். கரத்த - தும்பிக்கையுடைய. புன் மலந் தின் - இழிந்த மலத்தைத் தின்கின்ற. சூகரம் - பன்றி.

...

## 38.

**மந்திரமும் தேவும் மருந்தும் குருஅருளும்**
**தந்திரமும் ஞானந் தருமுறையும் - யந்திரமும்**
**மெய்யெனில் மெய்யாய் விளங்குமே மேதினியிற்**
**பொய்யெனிற் பொய்யாகிப் போம்.**

**அ-ள் :** தேவும் - கடவுளும். யந்திரம் - வேதமொழி அமைக்கும் கட்டடங்கள்.

ஒப்புமை

*பண்டு மராவென்று வான்மீகி யான பரிசெனவே*
*கொண்டி டவுடத மந்திரந் தெய்வங் குருவருளும்;*
*உண்டெனு வோருக் குண்டாமே, பொய்யாமென்*
*றுரைக்கும் அந்த*
*வண்டர்க் கில்லாமலும் போமே, குறுங்கை*
*மலைநம்பியே.*

**நம்பிச் சதகம் - 20.**

*- ஈசன்*
*உண்டென்பார்க் குண்டில்லை யென்றோர்க்*
*கில்லையென உரைக்க லாமே.*

**செயங்கொண்டார் வழக்கம் - 29.**

...

## 39.

**ஈசனெதிர் நின்றாலும் ஈசனருள் பெற்றுயர்ந்த**
**நேசரெதிர் நிற்ப தரிதாமே - தேசுவளர்**
**செங்கதிர்முன் நின்றாலும் செங்கதிர வன்கிரணந்**
**தங்குமணல் நிற்கரிதே தான்.**

**அ-ள் :** நேசர் - தெய்வ அடியார். தேசு - ஒளி. கிரணம் - ஒளிக்கதிர், சூடு. எதிர் நின்றாலும் - பகைத்து நின்றாலும். நிற்பரிது - நிற்பது இயலாது. நிற்கரிது - நிற்க இயலாது.

...

### 40.

**முற்றும் இறைசெயலே முற்றிடினும் தன்னருளைப்**
**பெற்றவர்தம் பாலே பெரிதாகும் - பற்றுபெருந்**
**தாபத் திடத்தே தழன்றிடினும் நற்சோதி**
**தீபத் திடத்தே சிறப்பு.**

**அ-ள் :** தாபம் - காடு. தழன்றிடினும் - தழல் + எரிந்திடினும் - ஒளிர்ந்திடினும். பற்றுபெருந் தாபத்திடத்து - பற்றியெரியும் பெரிய காட்டுத் தீயிடத்து. தீபம் - விளக்கு. முற்றிடினும் - முழுமையாக நிறைந்திருப்பினும்.

...

### 41.

**கன்னியரைப் பொன்நாண் கழிந்தோரை மற்றயலார்**
**பன்னியரை மாயப் பரத்தையரை - முன்னரிய**
**தாதியரை நல்லோர் தழுவநினை யார்; நரகத்**
**தீதுவரும் என்றே தெரிந்து.**

**அ-ள்:** பொன்நாண் கழிந்தோரை - கைம்பெண்களை. அயலார் பன்னியரை - மற்றவர் மனைவியரை. முன்னரிய தாதியரை - கருதத் தகாத வேலைக்காரிகளை.

ஒப்புமை

வேறாகிப் பூத்த பெண்ணாரையும் மூத்த
மின்னார்தமையும்,
பேறான சூதகம் நீங்கா திருக்கின்ற பெண்டிரையும்,
தேறா விதவையையும், சேருவோரை, மூதேவி யென்றும்
மாறா தடைந்து கொள்வாளே, குறுங்கை
மலைநம்பியே.

**நம்பிச் சதகம் - 75.**

...

## 42.

**தன்னை யளித்தாள் தமையன் மனைகுருவின்**
**பன்னி அரசன் பயில்தேவி - தன்மனையைப்**
**பெற்றாள் இவரைவர் பேசில் எவருக்கும்**
**நற்றாயர் என்றே நவில்.**

**அ-ள் :** தன்னை யளித்தாள் - தன்னைப் பெற்ற தாய். தமையன் மனை - அண்ணன் மனைவி. குருவின் பன்னி - ஆசிரியரின் மனைவி. அரசன் பயில்தேவி - அரசி.

ஒப்புமை

*அரசன், ஆ சான், தமையன், அம்மான் இவரை*
*மருவுமின்னார் தாயாவர் அன்றோ - மருவுலவு*
*மாமரைமின் னார்மருமம் மால்மருக! காமருவு*
*காமரைவென் றான்அருள்கு கா!*

**நீதிபோதவெண்பா - 60**

தன்மாதா குருவின் றேவி
தனக்குமூத் தவன்றன் தேவி
மன்தேவி தேவி மாதா
வண்மையா மிவர்க ளைந்தும்
பன்னூலின் படியா ராய்ந்து
பாங்குட னிவர்கள் தங்கள்
நன்மாதாச் சமான மென்று
நல்லறி வாளர் கொள்வார்.

**நீதிசாரம் 76.**

...

**43.**

**வாவியுறை நீரும் வடநிழலும் பாவகமும்**
**ஏவனைய கண்ணார் இளமுலையும் - ஓவியமே !**
**மென்சீத காலத்து வெம்மைதரும் வெம்மைதனில்**
**இன்பாரும் சீதளமா மே.**

**அ-ள் :** வாவி - குளம். வடநிழல் - ஆலமரத்தின் நிழல். பாவகம் - பாவு + அகம். - பாவு கல் இட்ட வீடு. ஏ அனைய கண்ணார் - அம்பு போன்ற விழிகளையுடைய பெண்கள். ஓவியமே - ஓவியம் போன்ற பெண்ணே ! சீத காலம் - குளிர்ச்சியான காலம். வெம்மைதனில் - வெப்பமான காலத்தில் . சீதளம் - குளிர்ச்சி.

**ஒப்புமை**

கூபநீர் ஆல நீழல்
குலவிய பாவ டக்குச்
சாபமாம் புருவ மாதர்
தனங்கள்தா னிவைகள் பானு
கோபநாள் குளிர்ச்சி யாயும்
குளிர்ச்சிநாள் வெச்சென் றாயும்
சோபமே தீர்த்து நல்ல
சுகத்தினை அளிக்கும் அன்றே.

**நீதிசாரம் - 68.**

ஆற்றியசெங் கல்வீடு மால மரநிழலும்
ஊற்றுள்ள கூவ லுறுநீரும் - சாற்றிளமை
சாரு மடவரலுந் தண்மைதருங் கோடையினில்
மாரியினில் வெம்மைதரும் வந்து.

**சாணக்கிய நீதிவெண்பா- 71.**

...

**44.**

**உற்றதொழில் செய்வோர்க்(கு) உறுபஞ்சம் இல்லையாம்**
**பற்றுசெபத் தோர்க்கில்லை பாவங்கள் - முற்றும்**
**மவுனத்தோர்க் கில்லை வருகலகம் துஞ்சாப்**
**பவனத்தோர்க் கில்லை பயம்.**

**அ-ள் :** செபத்தோர் - வழிபாடு செய்வோர். பவனத்தோர் - வானுலகோர், தேவர்கள்.

...

**45.**

**ஆபத்து வந்தால் அரும்பொருள்தான் வேண்டுமே**
**ஆபத்தேன் பூமா(து) அருகிருந்தால் - ஆபத்து**
**வந்தால் அவளும் மருவாமல் எப்பொருளும்**
**அந்தோ உடன்போம் அறி.**

**அ-ள் :** அரும்பொருள் - செல்வம். பூமாது - திருமகள். மருவாமல் - சேராமல்.

...

**46.**

**இன்னல் தரும்பொருளை ஈட்டுதலும் துன்பமே**
**பின்னதனைப் பேணுதலும் துன்பமே - அன்ன(து)**
**அழித்தலுந் துன்பமே அந்தோ பிறர்பால்**
**இழத்தலுந் துன்பமே யாம்.**

**அ-ள் :** ஈட்டுதல் - சம்பாதித்தல், சேகரித்தல். பேணுதல் - காப்பாற்றுதல். அழித்தல் - செலவழித்தல்.

ஒப்புமை

ஈட்டலும் துன்பம்; மற்(று) ஈட்டிய ஒண்பொருளைக்
காத்தலும் ஆங்கே கடுந்துன்பம்; காத்த
குறைபடின் துன்பம்; கெடின்துன்பம்; துன்பக்கு
உறைபதி மற்றைப் பொருள்.

**நாலடியார் - 280.**

தனத்தினைத் தேடத் துக்கம்
தானதைச் செம்மை பண்ணி
மனத்துடன் காக்கத் துக்கம்
வழங்கிய போதுந் துக்கம்
இனத்துடன் புசிக்கத் துக்கம்
எண்ணிய பொருளி னாலே
அனைத்தினுந் துக்கம் தானே
இருப்பிடம் ஆகுங் காலே

**நீதிசாரம் - 13.**

பாடவேறுபாடு 4:1 **இழித்தலுந்**

...

**47.**

**தானே புரிவினையால் சாரும் இருபயனும்**
**தானே அனுபவித்தல் தப்பாது - தான்நூறு**
**கோடிகற்பஞ் சென்றாலும் கோதையே! செய்தவினை**
**நாடிநிற்கும் என்றார் நயந்து.**

**அ-ள்:** கற்பம் - ஊழி, காலம். புரிவினை - நல்வினை, தீவினை. இருபயன் - இன்ப துன்பங்கள். கோதை - பெண்.

ஒப்புமை

தாந்தாமுன் செய்தவினை தாமே அநுபவிப்பார்
பூந்தா மரையோன் பொறிவழியே - வேந்தே
ஒறுத்தாரை என்செயலாம் ஊரெல்லாம் ஒன்றா
வெறுத்தாலும் போமோ விதி.

**நல்வழி - 30.**

நன்றுடன் தீதா னாலும்
அவரவர் நயந்து தன்னாற்
பண்ணிய பாவ நன்மை
பவித்தவர் அனுப விப்பார்;
சென்றிடு நூறு கற்பம்
செல்லினும் தவிர்ந்தி டாது
அன்றுசெய் அனுப வங்கள்
அனுபவித் திடவும் வேண்டும்.

**நீதிசாரம் - 2**

பல்லாவுள் உய்த்து விடினும் குழக்கன்று
வல்லாதாம் தாய்நாடிக் கோடலைத் - தொல்லைப்
பழவினையும் அன்ன தகைத்தே தற்செய்த
கிழவனை நாடிக் கொளற்கு.

**நாலடியார் - 101.**

பரியினும் ஆகாவாம் பாலல்ல உய்த்துச்
சொரியினும் போகா தம.

**திருக்குறள், ஊழ் - 376.**

...

**48.**

**தூய அறிவினர்முன் சூழ்துன்பம் இல்லையாம்**
**காயும் விடம்கருடற் கில்லையாம் - ஆயுங்கால்**
**பன்முகஞ்சேர் தீமுன் பயில்சீதம் இல்லையாம்**
**துன்முகனுக் குண்டோ சுகம்.**

**அ-ள் :** விடம் - நஞ்சு. ஆயுங்கால் - ஆராய்ந்து பார்க்கும்போது. பன்முகஞ்சேர் தீ - எல்லாப் பக்கமும் சுடர்விட்டெரியும் தீ. சீதம் - குளிர்ச்சி. துன்முகன் - தீயவன்.

...

**49.**

**தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்கல் என்றிவரோ(டு)**
**இன்புறத்தான் உண்டல் இனிதாமே - அன்புறவே**
**தக்கவரை இன்றித் தனித்துண்டல் தான்கவர்மீன்**
**கொக்கருந்த லென்றே குறி.**

**அ-ள் :** தென்புலத்தார் - தென்புலத்திலுள்ளதாய்க் கருதப்படும் இறந்தோர், பிதிரர். விருந்து - விருந்தினர். ஒக்கல் - சுற்றத்தார். குறி - எண்ணுக !

ஒப்புமை

*தென்புலத்தார் தெய்வம் விருந்துஒக்கல் தான்என்றாங்கு*
*ஐம்புலத்தாறு ஓம்பல் தலை.*

**திருக்குறள் - 43**

**50.**

**இந்திரவி நீள்கிரணம் எங்கும் நிறைந்தாலும்**
**இந்திரவி காந்தத் திலகுமே - இந்திரவி**
**நேத்திரத்தோன் எங்கும் நிறைந்தாலும் நித்தனருள்**
**நேத்திரத்தோர் பாலே நிறைவு.**

**அ-ள் :** இந்து இரவி நீள்கிரணம் - சந்திரன் சூரியன் ஆகியவற்றின் நீண்ட ஒளி. இந்து இரவி - சந்திர சூரியரின் ஒளி. காந்தத்து இலகும் - காந்தக் கல்லிடத்தில் விளங்கும். இந்திரவி நேத்திரத்தோன் - சந்திரனையும் சூரியனையும் கண்களாக உடைய கடவுள். நித்தன் - கடவுள். அருள்நேத்திரத்தோர் - அருட்கண்ணுடைய அடியவர்கள்.

...

**51.**

**தாமோ தரன்முதலோர் சாதல், நூல் சாற்றுவதும்**
**பூமேலோர் பொன்றுவதும் கண்டோமே - நாமுடலை**
**நேசிப்ப (து) என்னோ நிலையாகும் சங்கரனைப்**
**பூசிப்ப(து) என்றே புகல்.**

**அ-ள் :** தாமோதரன் - திருமால். சாதல் - இறத்தல். பூமேலோர் - பூமியில் வாழ்வோர். பொன்றுவது - இறப்பது. சங்கரன் - சிவபெருமான். புகல் - சொல்வாயாக.

ஒப்புமை

*நூறு கோடி பிரமர்கள் நொந்தினார்*
*ஆறு கோடிநா ராயணர் அங்ஙனே*
*ஏறு கங்கை மணலெண்ணி லிந்திரர்*
*ஈறி லாதவன் ஈசன் ஒருவனே.*

**- திருநாவுக்கரசர் தேவாரம், 5:214:3**

*எண்ணிலி இந்திரர் எத்தனையோ பிரமர்களும்*
*மண்மிசை மால்பலர் மாண்டனர்காண் தோணோக்கம்.*

**- திருவாசகம்.**

...

**52.**

**அரசின் இலையதனின் அக்கிரத்தி னின்று**
**விரைய விழுதுளியே போலும் - புரையுடைய**
**ஆக்கைவிடா முன்னம் அரன்பாதம் பூசித்தல்**
**நோக்கல்நன் றென்றே நுவல்.**

**அ-ள் :** அரசின் - அரச மரத்தின். அக்கிரத்தினின்று - நுனியிலிருந்து. விழுதுளி - விழுகின்ற நீர்த்துளி. புரை - குற்றம். ஆக்கை - உடம்பு. அரன் - சிவபெருமான். நுவல் - சொல்க.

ஒப்புமை

*கால மான கழிவதன் முன்னமே*
*ஏலு மாறு வணங்கிநின் றேத்துமின்.*

**- திருநாவுக்கரசர் தேவாரம், 5:157:9**

...

**53.**

**சத்தியத்தை வெல்லா(து) அசத்தியம்தான் நீள்பொறையை**
**மெத்திய கோபமது வெல்லாது - பத்திமிகு**
**புண்ணியத்தைப் பாவமது வெல்லாது போரரக்கர்**
**கண்ணனைத்தான் வெல்லுவரோ காண்.**

**அ-ள் :** அசத்தியம் - பொய். சத்தியம் - உண்மை. பொறை - பொறுமை. மெத்திய - மிகுந்த. பத்தி - அன்பு.

...

**54.**

**பொற்பறிவல் லாதபல புத்திரரைப் பேறலினோர்**
**நற்புதல்வ னைப்பெறுதல் நன்றாமே - பொற்கொடியே !**
**பன்றிபல குட்டி பயந்ததனால் ஏதுபயன்**
**ஒன்றமையா தோகரிக்கன் றோது.**

**அ-ள் :** பொற்பறிவு - பொலிவுமிக்க அறிவு. புத்திரர் - புதல்வர்,

பிள்ளைகள். பொற்கொடி - பொன்னால் ஆன கொடி போன்ற பெண். பயந்ததால் - பெற்றதால், ஈன்றதால். கரிக்கன்று - யானையின் கன்று.

ஒப்புமை

*ஊர்க்கண்ட பாலரைப் பெற்றதனால்,*
*பயனொன்று மில்லை;*
*பார்க்கண்டலைப் பன்றி குட்டியிட்டே*
*நொந்த பான்மைகண்டாய்;*
*கார்க்கண்டன் அன்று மிருகண்ட*
*னுக்குக் கருணை செய்த*
*மார்க்கண் டன்போற் பெறவேண்டும்,*
*குறுங்கை மலைநம்பியே.*

**நம்பிச் சதகம் -26.**

*கோரமிகு பன்றியின் குட்டிபல கூடினொரு*
*குஞ்சரக் கன்றாகுமோ*
..........................................................
*பலனிலாப் பிள்ளைக ளனேகம் பிறந்தும்விற்*
*பனனொருவ னுக்கு நிகரோ!*

**- குமரேச சதகம் - 53.**

*நன்றிதரும் பிள்ளையொன்று பெற்றாலும்*
*குலமுழுதும் நன்மை யுண்டாம்*
*அன்றியறி வில்லாத பிள்ளையொரு*
*நூறுபெற்றும் ஆவ துண்டோ*
*மன்றினடம் புரிவாரே தண்டலையா*
*ரேசொன்னேன் வருடந் தோறும்*
*பன்றிபல ஈன்றுமென்ன குஞ்சரமொன்*
*றீன்றதனாற் பயனுண் டாமே.*

**- தண்டலையார் சதகம் - 7**

வெஞ்சரக் குப்பை தொடுத்தெய்ய
 வேவெற்றி ராகவன்கைச்
செஞ்சரத் துக்கிணை யாமென்ப
 ரோவிட்ட தீனிதின்று
சஞ்சரிக் கும்பன்றிக் குட்டிகள்
 தாமதத் தாரைபொங்கும்
குஞ்சரக் கன்றுக்கொவ் வாவச்சு
 தாநந்த கோவிந்தனே.

**- கோவிந்த சதகம் - 87.**

**பா.வே.** *1:4* பெற்றதிலோ
*2:1,2* நற்புதல்வ ரைப்பெறுதல்
*3:3* பயந்ததினால்

...

55.

**அத்தி மலரும் அருங்காக்கை வெண்ணிறமும்**
**கத்துபுனல் மீன்பதமுங் கண்டாலும் - பித்தரே**
**கானார் தெரியல் கடவுளருங் காண்பரோ**
**மானார் விழியார் மனம்.**

**அ-ள் :** புனல் - நீர். மீன் பதம் - மீனின் அடிச்சுவடு, மீனின் கால். கானார் தெரியல் - மணம் பொருந்திய மாலை. மானார் விழியார் - மானின் விழிபோன்ற கண்களையுடைய பெண்கள்.

ஒப்புமை

அத்தியின் மலரும் வெள்ளை
 ஆக்கைகொள் காக்கை தானும்
பித்தர்தம் மனமும் நீரில்
 பிறந்தமீன் பாதம் தானும்
அத்தன்மால் பிரம தேவ
 னால்அள விடப்பட் டாலும்
சித்திர விழியார் நெஞ்சம்
 தெளிந்தவ ரில்லை கண்டீர்

**விவேகசிந்தாமணி - 45.**

அத்திப்பூவைக் கண்டாலும் காணலாம்; வெள்ளைக்காக்கையைக் கண்டாலும் காணலாம்; ஜலத்தில் மீன்காலைக் கண்டாலும் காணலாம்; ஸ்த்ரீகளுடை ஹ்ருதயத்தை மாத்ரம் காணக்கூடாது என்று ஸ்ரீகிருஷ்ணபகவான் சொன்னார். எ-று.

**நீதிசாஸ்திரம் 10.**

...

## 56.

**காளவிடப் பாந்தள் கருடனையும் கட்டுமோ**
**வாளெரியைக் கட்டுமோ வன்கயிறு - நீளும்**
**பவமருளும் பாசம்வெம் பஞ்சேந் திரியம்**
**சிவயோகி யைப்பிணியா வே.**

**அ-ள் :** காளவிடப் பாந்தள் - கருமையான நஞ்சையுடைய பாம்பு. வாள்எரி - ஒளிவீசும் நெருப்பு. பவம் - தீவினை. பாசம் - தீவினை. பாசம் - மலம் (குற்றம்). பஞ்சேந்திரியம் - ஐம்பொறிகள். பிணியா - துன்புறுத்தா.

...

**57.**

**புத்தியொடு முத்திதரும் புண்ணியத்தா லன்றியே**
**மத்தமிகு பாவத்தால் வாழ்வாமோ - வித்துபயிர்**
**தாயாகி யேவளர்க்குந் தண்புனலா லல்லாது**
**தீயால் வளருமோ செப்பு.**

**அ-ள்:** மத்த மிகு - அறியாமை மிகு. தண்புனல் - குளிர்ந்த நீர்.

...

**58.**

**சிவனே சிவனே சிவனேயென் பார்பின்**
**சிவனுமையா ளோடுந் திரிவன் - சிவனருளால்**
**பெற்றவிளங் கன்றைப் பிரியாமற் பின்னோடிச்**
**சுற்று பசுப்போல் தொடர்ந்து.**

**அ-ள் :** உமை - பார்வதி.

...

**59.**

**தாமுங்கொ டார்கொடுப்போர் தம்மையும்ஈ யாதவகை**
**சேமஞ்செய் வாரும் சிலருண்டே - ஏமநிழல்**
**இட்டுமலர் காய்கனிகள் ஈந்துதவும் நன்மரத்தைக்**
**கட்டுமுடை முள்ளெனவே காண்.**

**அ-ள்:** ஈயாத வகை சேமஞ்செய்வாரும் - கொடுக்காதபடி தடைசெய்து காவல்செய்பவர்களும். ஏமநிழல் - இன்பமளிக்கும் நிழல்.

**ஒப்புமை**

கொடுக்கின்ற வித்தம் எவர்க்கும்
கெடாது ; கொடுப்பவரைத்

*தடுக்குங் கயவரைத் தீமை*
*விடாது; தருந்தருவை*
*யிடுக்குந் தொடர்முள்ளுக் கேதுங்*
*கிட்டாது; வெள்ளிக்கொருகண்*
*வடுக்கொண்ட துன்னரு ளாமே,*
*குறுங்கை மலைநம்பியே.*

**நம்பிச் சதகம் - 43.**

*ஈவாரை ஈயஒட்டான்; இவனும் ஈயான்*

**விவேக சிந்தாமணி - 15**

...

## 60.

**ஆயுமலர்த் தேன்வண் டருந்துவது போல்இரப்போர்**
**ஈயு மவர்வருந்தா தேற்றலறம் - தூயஇளம்**
**பச்சிலையைக் கீடமறப் பற்றி யரிப்பதுபோல்**
**அச்சமுற வாங்க லகம்.**

**அ-ள் :** ஆயும் - வண்டினால் ஆராயப்படும். கீடம் - புழு. அகம் - நான் எனும் முனைப்பு; இங்குத் 'தீமையை'க் குறித்தது.

...

## 61.

**மாதா மரிக்கின் மகன்நாவின் நற்சுவைபோம்**
**தாதா வெனிற்கல்வி தானகலும் - ஒதினுடன்**
**வந்தோன் மரித்துவிடில் வாகுவலி போம்மனையேல்**
**அந்தோ இவையாவும் போம்.**

**அ-ள் :** மரிக்கின் - இறந்தால். தாதா - தந்தை. உடன்வந்தோன் - சகோதரன். ஓதின் - சொல்லுவோமானால். வாகுவலி - தோள்வலிமை. மனையேல் - மனைவியென்றால். அந்தோ - அய்யோ.

**ஒப்புமை**

*தாயோ(டு) அறுசுவைபோம் தந்தையொடு*
*கல்விபோம்;*
*சேயோடு தான்பெற்ற செல்வம்போம்; - ஆயவாழ்(வு)*
*உற்றா ருடன்போம்; உடன்பிறப்பால் தோள்வலிபோம்;*
*பொற்றாலி யோடெவையும் போம்.*

**ஔவையார் பாடல் - 64,**
**தனிப்பாடல் திரட்டு தொகுதி - 1.**

*அன்னையே மரித்தால் வாய்க்கு*
*ருசிநட்டம்; அய்யன் தானும்*
*பின்னையே மரித்தால் வித்தை*
*பேணுதல் நட்டம்; இன்றிப்*
*பன்னிடு துணைவன் அற்றால்*
*சரீரத்தில் பாதி நட்டம்;*
*தன்னுடை பாரி அற்றால்*
*சருவாங்க நட்டந் தானே.*

**நீதிசாரம் - 28.**

...

**62.**

**ஓதுபொருள் கண்டோர்க் குறுமாசை நீதியிலாப்**
**பாதகரைக் கண்டோர்க்குப் பாவமாம் - சீதமலர்**
**கண்டோர்க் குறும்வாசம் கற்றமைந்த நற்றவரைக்**
**கண்டோர்க் குடனாங் கதி.**

**அ-ள்:** உறும் - பொருந்தும், உண்டாகும். சீதமலர் - குளிர்ந்த மலர். நற்றவர் - நல்ல தவச்சீலர்கள். கதி - நன்னிலை, நல்ல வழி.

...

**63.**

**பாவிதனந் தண்டிப்போர் பாலாகும் அல்லதருள்**
**மேவுசிவன் அன்பர்பால் மேவாதே - ஓவியமே !**
**நாயின்பால் அத்தனையும் நாய்தனக்காம் அன்றியே**
**தூயவருக் காகுமோ சொல்.**

**அ-ள்:** பாவி - தீயவர். தனம் - செல்வம். ஓவியம் - ஓவியத்திலெழுதிய போன்ற பெண், மகடூ முன்னிலை. தண்டிப்போர்பால் - தீயவர்களிடத்தில். மேவாது - சேராது.

**64.**

**பொன்னும் கரும்பும் புகழ்பாலுஞ் சந்தனமும்**
**சின்னம் படவருத்தம் செய்தாலும் - முன்னிருந்த**
**நற்குணமே தோன்றும் நலிந்தாலும் உத்தமர்பால்**
**நற்குணமே தோன்றும் நயந்து.**

**அ-ள் :** சின்னம்பட - நிலைகுலைய. நயந்து - மிளிர்ந்து.

ஒப்புமை

தங்கமா னதுதழலி னின்றுருகி மறுகினும்
தன்னொளி மழுங்கிடாது
சந்தனக் குறடுதான் மெலிந்துதேய்ந் தாலுமே
தன்மணம் குன்றிடாது

பொங்கமிகு சங்குசெந் தழலில்வெந் தாலுமே
பொலிவெண்மை குறைவுறாது
போதவே காய்ந்துநன் பால்குறுகி னாலும்
பொருந்துசுவை போய்விடாது

துங்கமணி சாணையில் தேய்ந்துவிட் டாலும்
துலங்குகுணம் ஒழியாதுபின்
தொன்மைதரு பெரியோர் மடிந்தாலும் அவர்களது
தூயநிறை தவறாகுமோ

மங்களகல் யாணிகுற மங்கைசுர குஞ்சரியை
மருவுதிண் புயவாசனே
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேசனே.

**குமரேச சதகம் - 17**

அடினும் ஆவின்பால் தன்சுவை குன்றாது
சுடினும் செம்பொன் தன்ஒளி கெடாது
அரைக்கினும் சந்தனம் தன்மணம் அறாது.

**அதிவீரராமபாண்டியரின்**
**வெற்றிவேற்கை - 23,24,25.**

துர்ச்சனரும் பொன்னும் துடியும் துரகதமும்
அச்சம்அற முன்நிற்கும் ஆயிழையும் - நச்சரவும்
கண்டித்த எள்ளும் கரும்பும் இளநீரும்
தண்டித்தார்க்கு அன்றோ சயம்.

**விவேக சிந்தாமணி -**
**இரண்டாம் பகுதி - 14**

அட்டாலும் பால்சுவையின் குன்றாது ; அளவளாய்
நட்டாலும் நண்பல்லார் நண்பல்லர்;
கெட்டாலும் மேன்மக்கள் மேன்மக்க ளே; சங்கு
சுட்டாலும் வெண்மை தரும்.

**ஔவையாரின் மூதுரை - 4.**

சந்தன மென்குறடு தான்தேய்ந்த காலத்தும்
கந்தம் குறைபடா தாதலால் - தம்தம்
தனம்சிறியர் ஆயினும் தார்வேந்தர் கேட்டால்
மனம்சிறியர் ஆவரோ மற்று?

**ஔவையாரின் மூதுரை - 28.**

''சந்தனக்கோல் குறுகினாற் பிரப்பங்கோல்
ஆகாது''

(தொல்காப்பியம் எழுத்ததிகாரம் - 2
''அவைதாம் குற்றியலிகரம் ...''
எனத் தொடங்கும் நூற்பாவுக்கான
**நச்சினார்க்கினியர் உரை.)**

தறிபட்ட சந்தனக் கட்டைபழு தாயினும்
சார்மணம் பழுதாகுமோ
தக்கபால் சுவறிடக் காய்ச்சினும் அதுகொண்டு
சாரமது ரம்குறையுமோ
நிறைபட்ட கதிர்மணி அழுக்கடைந் தாலும்அதின்
நீள்குணம் மழுங்கிவிடு மோ
நெருப்பிடை உருக்கினும் அடிக்கினும் தங்கத்தின்
நிறையுமாற் றுக்குறையு மோ.

..............................................................................

.........................................................

கற்றபெரி யோர்மகிமை அற்பரறி கிலரேனும்
காசினி தனிற்போகு மோ?

**அறப்பளீசுர சதகம் - 23.**

கடித்துக் கரும்பினைக் கண்டகர நூறி
இடித்துநீர் கொள்ளினும் இன்சுவைத்தே யாகும்
வடுப்பட வைதிறந்தக் கண்ணும் குடிப்பிறந்தார்
கூறார்தம் வாயிற் சிதைந்து.

**நாலடியார் 156.**

கன்னலும் பாலும் கனகமும் சந்தனமும்
என்னகண்டித் தாலும் இயல்பகலா - அன்னவைபோல்
வேலவ ! சான் றோரை மிகவருத்தி னும்தமது
சீலநலங் குன்றிவிடா தே.

**நீதிபோதவெண்பா -45.**

...

**85.**

**வேசியரும் நாயும் விதிநூல் வயித்தியரும்**
**பூசுரரும் கோழிகளும் பொன்னனையாய் ! - பேசிலொரு**
**காரணந்தான் இன்றியே கண்டவுட னேபகையாம்**
**காரணந்தான் அப்பிறப்பே காண்.**

**அ-ள் :** விதிநூல் - சட்டநூல், பூசுரர் - பார்ப்பனர், பொன்னனையாய் - பொன்னொத்த (திருமகள் ஒத்த) பெண்ணே! (மகடூஉ முன்னிலை)

ஒப்புமை

ஆடவரும் தாசியரும், ஆரணரும், வாரணமும்,
மேடமும், நாயும், ஆயுள் வேதியரும் - கூடி
யிருத்தல் அரிதாகும்; என்மனத்தில் உன்தாள்
பொருத்திஅருள் செய்குக! இப் போது.

**நீதிபோதவெண்பா - 58.**

மறையவர் வேசி கோழி
　　வைத்தியன் சுணங்க னைந்தும்
முறையுடன் றங்கள் சாதி
　　கண்டிடின் முனிந்து சீறிக்
குறைபெறு கரும மின்றி
　　நிட்கரு மங்க ளாக
நிறைவறச் சண்டை செய்வ
　　ரவரவர் குணங்க டாமே.

**நீதி சாரம் 48.**

...

66.

**அன்னமனை யாய்! குயிலுக் கானவழ கின்னிசையே**
**கன்னல்மொழி யார்க்கழகு கற்பாமே - மன்னுகலை**
**கற்றோர்க் கழகு கருணையே ஆசைமயக்(கு)**
**அற்றோர்க் கழகுபொறை யாம்.**

**அ-ள் :** அன்னமனையாய் - அன்னப்பறவை போன்ற பெண்ணே ! (மகடூஉ முன்னிலை). கன்னல்மொழியார் - கரும்பு போன்ற இனிமையான மொழிகளைப் பேசும் பெண்கள். ஆசை மயக்கு அற்றோர் - துறவிகள். பொறை - பொறுமை.

...

67.

**இதமகித வார்த்தை எவர்க்கேனும் மேலாம்**
**இதமெனவே கூறலித மன்றே - இதமுரைத்த**
**வாக்கினால் ஏரண்ட மாமுனியுஞ் சோழனொடு**
**தேக்குநீர் வீழ்ந்தொழிந்தான் சேர்ந்து.**

**அ-ள் :** இதமகித வார்த்தை - (இதம், அகிதம்) - இனிய சொற்களும் இனிமையற்ற சொற்களும்.

**கதை :** காவிரியாறு திருவலஞ்சுழி என்னுமிடத்திற்குப் பக்கத்தில் நீர்தேங்கி நிலத்துட் சுழித்துச் சென்றது. சோழன் அந்நீர் நாட்டுக்குப் பயன்படாமற் போகின்றதே என்றெண்ணி வருந்தி ஏரண்ட முனிவரிடஞ் சொன்னான். முனிவர் அந்த நீர்ச்சுழியில் ஒரு மயிர்த்தலையைப் பலி கொடுத்தால் அது நாட்டிற் பாயும் என்றார்; 'அரசன் உலகம் நன்மையடைய வேண்டுமேயென்று தன் தலையைக் கொடுத்து இறந்தான். நமது சொல்லாலன்றோ அரசன் உயிரிழக்க நேர்ந்ததென்று முனிவரும் அவனொடு சேர்ந்து அச்சுழியில் வீழ்ந்து இறந்தார். 'அரசன் இரக்கமுடையவனாதலால், அவனிடத்தில் உண்மையான பயன்படு சொல்லைச் சொன்னால் என்ன நேருமோ' என்று நினையாமல், நல்லாரிடத்தில் நற்சொல் சொல்லல் வேண்டுமென்பதே கருத்தாகக் கொண்டு ஏரண்டர் சொன்னமையால், அரசன் இறந்து நாடு கெட்டதுமன்றித் தாமும் உயிரிழக்க நேர்ந்தமை காண்க.

**நீதிவெண்பா, இளவழகனாருரை.11.56,57.**

...

## 68.

**இத்தரையோர் தம்மில் இருவரே மேலானோர்**
**சித்திரச வாதி, சிவயோகி - முத்தனையாய் !**
**நல்குரவும் உற்பவமும் நாசம் புரிவரே**
**அல்லவர் வீரியக்கீ டம்.**

**அ-ள் :** மேலானோர் - மேன்மையானவர், உயர்ந்தோர்.

சித்திரசவாதி - சித்தாகிய இரவாதம் செய்யும் சித்தர்கள். அல்லவர் - சித்து இரசவாதி, சிவயோகி ஆகிய இருவர் அல்லாத மற்றையோர். முத்தனையாய் - முத்துப் போன்ற பெண்ணே! (மகடூஉ முன்னிலை) நல்குரவு - வறுமை. உற்பவம் - பிறப்பு. வீரியக் கீடம் - பொறியினாலான புழுக்கள்.

**பாடவேறுபாடு 3:4 புரிவாரே**

...

**69.**

**அற்றசிவ யோகிக்(கு) அருஞ்சின்னம் மூன்றுண்டு**
**பற்றலகை உன்மத்தர் பாலரியல் - முற்றுரச**
**வாதிக்குச் சின்னமூன் றுண்டே மகிழ்போகம்**
**ஈதல் இரவாமை என்று.**

**அ-ள் :** ரசவாதி - சித்தர். சின்னம் - அடையாளம். அற்ற சிவயோகி - துறந்த சிவயோகி. அலகை உன்மத்தர் பாலர் இயல் - பேய்களியல்பு, பித்தரியல்பு, குழந்தையியல்பு. போகம் - இன்பம். இரவாமை - பிச்சையெடாமை, யாசியாமை

ஒப்புமை

*''பாலருடன் உன்மத்தர் பிசாசர்குணம் மருவிப்*
*பாடலினொ டாடலிவை பயின்றிடினும் பயில்வர்''*

**(சிவஞான சித்தியார் - நூற்பா 8, அதி - 2,32)**

...

## 70.

**வல்லவர்பாற் கல்வி மதம்ஆ ணவம்போக்கும்**
**அல்லவர்பாற் கல்வி யவையாக்கும் - நல்லிடத்தில்**
**யோகம் பயில்வார் உயர்ந்தோர். இழிந்தோர்கள்**
**போகம் பயில்வார் புரிந்து.**

**அ-ள் :** மதம் - அறியாமை. போகம் - உலக வாழ்க்கை, இன்பம்.

ஒப்புமை

*பொல்லார்க்குக் கல்விவரின் கருவம் உண்டாம் ;*
*அதனோடு பொருளும் சேர்ந்தால்,*
*சொல்லாதும் சொல்லவைக்கும்; சொற்சென்றால்*
*குடிகெடுக்கத் துணிவர், கண்டாய்!*
*நல்லோர்க்குஇம் மூன்றுகுணம் உண்டாகில்*
*அருள்அதிக ஞானம் உண்டாம்*
*எல்லார்க்கும் உபகார ராயிருந்து*
*பரகதியை எய்து வாரே.*

**விவேகசிந்தாமணி - 100**

...

## 71.

**தீயவர்பாற் கல்வி சிறந்தாலும் மற்றவரைத்**
**தூயவரென் றெண்ணியே துன்னற்க - சேயிழையே !**
**தண்ணொளிய மாணிக்கம் சர்ப்பந் தரித்தாலும்**
**நண்ணுவரோ மற்றதனை நாடு.**

**அ-ள்:** துன்னற்க - சேரவேண்டாம். சேயிழையே - செம்மைவாய்ந்த நகைகளை அணிந்த பெண்ணே! (மகடூஉ முன்னிலை). தண்ணொளிய - குளிர்ச்சியான ஒளியினை உடைய. சர்ப்பம் - பாம்பு. நண்ணுவரோ - நெருங்குவரோ ! நாடு - எண்ணுக !

...

## 72.

**ஊரூர் எனும்வனத்தே ஒள்வாட்கண் மாதரெனுங்**
**கூரூர் விடமுட் குழாமுண்டே - சீரூர்**
**விரத்தி, வை ராக்கிய, வி வேகத் தொடுதோல்**
**உரத்தணியத் தையாவென் றோது.**

**அ-ள் :** வனம் - காடு. ஒள்வாட்கண் மாதர் - ஒளிவீசும் வாள் போன்ற கண்களையுடைய பெண்கள். முட்குழாம் - முள்கூட்டம். சீரூர் - சிறப்பமிகு. விரத்தி - துறவியர். விவேகம் - அறிவு. வைராக்கியம் - உறுதி. தொடுதோல் - செருப்பு . உரத்து அணிய - காலில் அணிய. தையா - (முன்) தைக்கமாட்டா.

...

## 73.

**போற்று குருகிளைஞர் பொன்னாசை யோர்க்கில்லை**
**தோற்றுபசிக் கில்லை சுவைபாகம் - தேற்றுகல்வி**
**நேசர்க் கிலைசுகமும் நித்திரையும் காமுகர்தம்**
**ஆசைக் கிலைபயம்மா னம்.**

**அ-ள் :** கிளைஞர் - சுற்றத்தார். பொன்னாசை - செல்வத்தின் மீது ஆசை. தோற்று பசிக்கு - தோன்றும் பசிக்கு. சுவை பாகம் - நல்ல சுவை, நல்ல சமையல். தேற்று - தெளிவுதரும்.

ஒப்புமை

பொன்னாசை யுள்ளவர்க் குறவேது குருவேது
பொங்குபசி யுள்ளபேர்க்குப்
போதவே சுசியேது ருசியேது மயல்கொண்டு
பொதுமாதர் விழிவலையிலே

எந்நாளும் அலைபவர்க் கச்சமொடு வெட்கமே
தென்றென்றும் உறுகல்விமேல்
இச்சையுள பேர்க்கதிக சுகமேது துயிலேது
எளிதா யிருந்துகொண்டே

பன்னாளும் அலைபவர்க் கிகழேது புகழேது
பாரில்ஒரு வர்க்கதிகமே
பண்ணியிடு மூடருக் கறமேது மறமலால்
பகர்நிரயம் ஒன்றுளதுகாண்.

**அறப்பளீசுர சதகம் - 78.**

...

## 74.

**நன்றறியாத் தீயோர்க் கிடங்கொடுத்த நல்லோர்க்கும்**
**துன்று கிளைக்குந் துயர்சேரும் - குன்றிடத்திற்**
**பின்னிரவில் வந்தகரும் பிள்ளைக் கிடங்கொடுத்த**
**அன்னமுதற் பட்டதுபோ லாம்.**

**அ-ள் :** துன்று கிளை - சார்ந்த சுற்றத்தார். குன்றிடத்தில் - மலையில். கரும்பிள்ளை - காக்கை. அன்னம் - அன்னப்பறவை. பட்டது - துன்பப்பட்டது.

**கதை :** ஒரு பெரிய மலையில் ஓர் அன்னப்பறவை தன் இனத்தோடுவாழ்ந்துகொண்டிருந்தது. அப்போது ஒருநாளிரவில் மழையால் நனைந்து வருந்திய காகமொன்று அங்கு வந்து இருக்க இடங்கேட்டது. அவ் வன்னம் இடந்தரவே, காகமும் அங்குத் தங்கினமையின், அஃது எச்சமிட நேரிட்டது. அவ்வெச்சத்திலிருந்து ஆலம் விதை முளைத்தெழுந்து மரமாகிக் கீழே விழுதுவிட, அவ் விழுதுகளைப் பற்றிப் பலர் மேலே ஏறிவந்து அவ்வன்னத்தையும், அதைச்சேர்ந்த பிற அன்னங்களையும் பிடித்துக் கொண்டனர். தாழ்ந்த காக்கைக்கு இடம் விட்டமையின், உயர்ந்த அன்னத்துக்குத் துன்பம் வந்தமை காண்க.

**நீதிவெண்பா, இளவழகனார் உரை, ப. 62.**

...

## 75.

**மனம்வேறு சொல்வேறு மன்னுதொழில் வேறு**
**வினைவேறு பட்டவர்போல் மேவும் - அனமே !**
**மனமொன்று சொல்லொன்று வான்பொருளு மொன்றே**
**கனமொன்று மேலவர்தங் கண்.**

**அ-ள்:** மன்னு தொழில் - செய்யும் செயல். வினை வேறுபட்டவர்பால் - செயல்களில் ஒழுங்கில்லாதவரிடத்தில். அனமே - அன்னமே - அன்னப் பறவை போன்ற நடையையுடைய பெண்ணே! (மகடூஉ முன்னிலை). மேலவர்தங்கண் - மேலவரிடத்தில். வான்பொருள்- உயர்ந்த செயல். கனம் ஒன்று - பெருமை ஒன்றிய.

...

76.

**கண்ணுக் கினிய சபைக்குமணி கற்றோனே**
**விண்ணுக் கினியமணி வெய்யோனே - வண்ணநறுஞ்**
**சந்த முலையாள் சயனத் தினியமணி**
**மைந்தன் மனைக்கு மணி.**

**அ-ள் :** வெய்யோன் - சூரியன். நறுஞ் சந்த முலையாள் - நறுமணம் உடைய சந்தனம் பூசிய கொங்கைகளையுடைய மனைவி. சயனம் - படுக்கை. மனை - வீடு. மணி - மணிபோல் - மாணிக்கம் போல் அழகு செய்வது.

...

77.

**பாலின்நீர் தீயனுகப் பால்வெகுண்டு தீப்புகுந்து**
**மேலும்நீர் கண்டமையும் மேன்மைபோல் - நூலினெறி**
**உற்றோர் இடுக்கண் உயிர்கொடுத்தும் மாற்றுவரே**
**மற்றோர் புகல மதித்து.**

**அ-ள் :** நூலின் நெறி உற்றோர் - அறநூலின் நெறியின் வழியில் நடப்போர். இடுக்கண் - துன்பம்.

...

78.

**அந்தோ ! புரமெரித்த அண்ணலடி யார்பொருள்கள்**
**செந்தீ யினுங்கொடிய தீகண்டாய் - செந்தீயை**
**நீங்கிற் சுடாதே நெடுந்தூரம் போனாலும்**
**ஏங்கச் சுடுமே இது.**

**அ-ள் :** புரம் - மூன்று புரங்கள். அண்ணல் - சிவபெருமான். அண்ணலடியார் - சிவனடியார்கள்.

...

**79.**

**நிந்தையிலாத் தூயவரும் நிந்தையரைச் சேரிலவர்**
**நிந்தையது தம்மிடத்தே நிற்குமே - நிந்தைமிகு**
**தாலநிழற் கீழிருந்துஆன் றன்பால் அருந்திடினும்**
**பாலதெனச் சொல்லுவரோ பார்.**

**அ-ள் :** நிந்தையர் - நிந்திக்கத்தக்க கயவர். தாலநிழல் - பனை மரத்தின் நிழல். ஆன்றன் பால் - பசுவினுடைய பால்.

ஒப்புமை

காலமறி தண்டலையார் வளநாட்டிற்
கொலைகளவு கள்ளே காமம்
சாலவருங் குருநிந்தை செய்பவர்பால்
மேவியறந் தனைச்செய் தற்கும்
சீலமுடை யோர்நினையார் பனையடியி
லேயிருந்து தெளிந்த ஆவின்
பாலினையே குடித்தாலுங் கள்ளென்பார்
தள்ளென்பார் பள்ளென் பாரே.

**தண்டலையார் சதகம் - 87.**

மிடித்தாலு மெத்தப் பசித்தாலு
நல்லவர் மேரைதப்பி
வடித்தா யிரந்தரங் கட்குடிப்
பார்மனை வாசல்புகார்
படித்தார்கள் கள்ளிறக் கும்பனங்
காட்டினிற் பால்கொண்டுபோய்க்
குடித்தாலுங் கள்ளென்ப ரேயச்சு
தாநந்த கோவிந்தனே.

**கோவிந்த சதகம் - 59.**

வீணர்பூண் டாலும் தங்கம்
        வெறும்பொய்யாம் மேற்பூச் சென்பார் ;
பூணுவார் தராப்பூண் டாலும்
        பொருந்திய தங்க மென்பார் ;
காணவே பனைக்கீ ழாய்ப்பால்
        குடிப்பினும் கள்ளே யென்பார் ;
மாண்உல கத்தோர் புல்லர்
        வழக்குரை மெய்என் பாரே.

**விவேகசிந்தாமணி - 34.**

இதம்ஆ னிரைத்தெரு வின்மது
        மாந்தினும், ஈர்ம்பனைக்கீழ்த்
திதமாய் அமுதுஉண வேபயம்
        ஆம்ஒரு தீதுஅலரால்;
மதமா மருட்சிய ரால்புன்மை
        மேன்மை மறப்பும்இந்த
விதமாய் விடும்; உல கைச்செழி
        யா ! திரு வேங்கடமே !

**செழியதரையன் நன்னெறி -34.**

உத்தம னிரவில் வேசி
        யமர்மறு கருகே சென்றால்
மெத்தவுஞ் சமுசி யங்கள்
        விளம்பிடுங் கதைநே ராகப்
புத்துமா யிரவு மாகிப்
        பொருந்திய பழுதை மேலே
சுத்தியே கிடக்கி லையந்
        தோன்றிடும் போல வாமே.

**நீதிசாரம் 35.**

...

### 80.

**கன்மமே பூரித்த காயத்தோர் தம்செவியில்**
**தன்மநூல் புக்காலுந் தங்காதே - சன்மமெலும்(பு)**
**உண்டு சமிக்கும்நாய் ஊண்ஆவின் நெய்யதனை**
**உண்டு சமிக்குமோ ஓது.**

**அ-ள் :** கன்மம் - வினை. பூரித்த - மிகுந்த. காயத்தோர் - உடம்பையுடையோர். தன்மநூல் - தர்ம நூல் - நீதிநூல். புக்காலும் - புகுந்தாலும். சன்மம் - தோல். சமிக்கும் - வாழும், பசியாறும். ஊண் - உணவு. ஆவின்நெய் - பசுவின் பாலினின்று பெறப்படும் நெய்.

...

### 81.

**பெண்ணுதவுங் காலை பிதாவிரும்பும் வித்தையே**
**எண்ணில் தனம்விரும்பும் ஈன்றதாய் - நண்ணிடையிற்**
**கூரியநற் சுற்றம் குலம்விரும்பும் காந்தனது**
**பேரழகு தான்விரும்பும் பெண்.**

**அ-ள் :** பிதா - தந்தை. வித்தை - கல்வி. எண்ணில் - எண்ணற்ற. தனம் - செல்வம். காந்தன் - கணவன்.

ஒப்புமை

குலம்வேண்டும் என்றிருப்பர் குலத்துள்ளார்.
கல்வியினால் குறையா ஞானப்
பலம்வேண்டும் என்றிருப்பர் தந்தைமார்
பரந்தபெருஞ் செல்வ முள்ள

*தலம்வேண்டும் என்றிருப்பர் தாய்மார்கள்*
*யவ்வனமும் அழகுஞ் சார்ந்த*
*நலம்வேண்டும் என்றிருப்பர் நாறுகுழற்*
*கன்னிமார் நலத்தின் மிக்கார்.*

**இராவணன் பிறப்புப் படலம் - 60.**
**உத்தரகாண்டம் - ஒட்டக்கூத்தர்.**

*கன்னியை ஈயத் தந்தை*
*கல்விமான் றனையே வேண்டும் ;*
*தன்னியம் ஈந்த அன்னை*
*தனபதி தனையே வேண்டும் ;*
*உன்னிய சுற்றத் தார்கள்*
*உறவினை வேண்டு வார்கள்;*
*மன்னிய கன்னி ரூப*
*வானையே வேண்டி நிற்கும்.*

**நீதிசாரம் - 37.**

*பெண் உருவத்தை விரும்புவள். தாய் செல்வத்தையும், தந்தை கல்வியையும், சுற்றத்தார் குலத்தையும், விரும்புவர். மற்றையோர் இனிய அறுசுவை மிக்க நல்ல உணவை விரும்புவர்.*

**சுக்கிர நீதி, மூன்றாம் அத்தியாயம் - சுலோக எண்:172.**
**(பண்டிதமணியின் மொழிபெயர்ப்பு நூல்)**

...

## 82.

**காந்துநறும் புண்ணைக் கலந்து ஈ விரும்புமே**
**வேந்தர் தனமே விரும்புவார் - சாந்தநூல்**
**கல்லார் பகைசேர் கலகம் விரும்புவார்**
**நல்லார் விரும்புவார் நட்பு.**

**அ-ள் :** தனம் - செல்வம். சாந்தநூல் - உள்ளத்தில் அமைதியை ஏற்படுத்தக்கூடிய உயர்ந்த அற, அருள் நூல்.

...

## 83.

**கற்றைக் குழலார் கவினெல்லாம் ஓர்மகவைப்**
**பெற்றக் கணமே பிரியுமே - கற்றருளை**
**வேட்ட பெரியோர் பெருமையெல்லாம் வேறொன்றைக்**
**கேட்ட பொழுதே கெடும்.**

**அ-ள் :** கற்றைக் குழலார் - பெண்கள். கவின் - அழகு, எழில். மகவு - குழந்தை. பெற்றக் கணமே - பெற்றெடுத்த அந்தநொடியே. கற்றருளை - கற்று அருளை. வேட்ட - விரும்பிய. வேறொன்றை - அருள்தரும் பொருளுக்கு வேறான ஒன்றை.

### ஒப்புமை

இகலிரு வருக்குண் டாகி
லிருவரி லொருவ ரற்றால்
பகையறு மிருவர் கோபம்
பணிந்திடி லொருவ ராறும்

மகவினைப் பெற்ற வன்றே
மடமின்னார்க் கிளமை போகும்
புகன்றொரு வன்பாற் சென்று
யாசிக்கிற் பெருமை போகும்.

**நீதிசாரம் .43.**

...

**84.**

**சீலங் குலமடியாள் தீண்டிற் கெடும் கணிகை**
**ஆலிங் கனம்தனநா சம்மாகும் - நூலிழந்த**
**வல்லிதழு வக்குறையும் வாழ்நாள் பிறர்தாரம்**
**புல்லினர்க்கெல் லாநலமும் போம்.**

**அ-ள் :** சீலம் - ஒழுக்கம், உயர்நிலை. அடியாள் - பணிப்பெண். கணிகை - விலைமகள். ஆலிங்கனம் - சேர்க்கை. தனம் - செல்வம். நூலிழந்த வல்லி - தாலியை இழந்த கைம்பெண். பிறர்தாரம் - அடுத்தவர் மனைவி. புல்லினர்க்கு - தழுவியர்க்கு.

...

**85.**

**சத்தியமெக் காலுஞ் சனவிருத்த மாகுமே**
**எத்தியபொய் யார்க்கும் இதமாகும் - நத்தியபால்**
**வீடுதொறுஞ் சென்று விலையாம் மதுஇருந்த**
**வீடுதனி லேவிலையா மே.**

**அ-ள் :** சனம் - கீழோர். விருத்தம் - வெறுப்பு.

...

86.

**நல்லொழுக்கம் இல்லார் இடஞ்சேர்ந்த நல்லோர்க்கும்**
**நல்லொழுக்கம் இல்லாச்சொல் நண்ணுமே - சொல்லும்விடப்**
**பாம்பெனஉன் னாரோ பழுதையே யானாலும்**
**தூம்பமரும் புற்றடுத்தாற் சொல்.**

**அ-ள்:** உன்னாரோ - நினைக்கமாட்டார்களோ. பழுதை - பழுதைக் கயிறு. தூம்பு அமரும் - ஓட்டைகள் உடைய.

...

87.

**வாக்குநயத் தாலன்றிக் கற்றவரை மற்றவரை**
**ஆக்கைநயத் தாலறியல் ஆகாதே - காக்கையொடு**
**நீலச் சிறுகுயிலை நீடிசையா லன்றியே**
**கோலத் தறிவருமோ கூறு.**

**அ-ள் :** இசையால் - இசைக்குரலால். ஆக்கை நயத்தால் - உடம்பு அழகினால். கோலம் - உருவம், தோற்றம்.

...

88.

**ஆசையெனும் பாசத்தால் ஆடவர்தஞ் சிந்தைதனை**
**வீசுமனை யாந்தறியில் வீழ்த்தியே - மாசுபுரி**
**மாயா மனைவியரா மக்கள் மகவென்னும்**
**தாயாற் கடிப்பித்தல் நாடு.**

**அ-ள் :** மனை - இல்வாழ்க்கை. தறி - தூண். மகவு - குழந்தை. நாடு - நாடுக - எண்ணுக.

...

89.

**தானறிந்தோ ருக்குதவி தன்னா லமையுமெனில்**
**தானுவந் தீதல் தலையாமே - ஆனதனாற்**
**சொன்னாற் புரிதலிடை சொல்லியும்பன் னாள்மறுத்துப்**
**பின்னாள் புரிவதுவே பின்.**

**அ-ள் :** உவந்து ஈதல் - விரும்பி உதவுதல். பின்னாள் - பிற்றை நாள்.

...

90.

**உற்ற மறையகத்தின் உய்க்குவன் உத்தமனே**
**மற்று மறைபகர்வோன் மத்திமனே - முற்றிழையே !**
**அத்த முறலாற் புகல்வான் அதமனென**
**வித்தகநூல் ஓதும் விரித்து.**

**அ-ள்:** உத்தமன் - முதல்நிலையில் போற்றத்தக்கவன். மத்திமன் - இடைநிலையில் வைக்கத்தக்கவன். அதமன் - கடைநிலையில் கருதத்தக்கவன். மறை - ரகசியம். மறை அகத்தின் உய்க்குவன் - பிறரின் இரகசியத்தை நெஞ்சிலேயே வைத்துக் காப்பவன். மறைபகர்வோன் - இரகசியத்தை வெளியில் சொல்லுபவன். அத்தம் - அர்த்தம் - செல்வம், பணம். உறலால் - வந்து சேர்வதால். புகல்வான் - (இரகசியங்களை) வெளியில் சொல்பவன். முற்றிழை

- முழுமை பெற்ற இழைகளை (நகைகளை) அணிந்த பெண், மகடூஉ முன்னிலை. வித்தகநூல் - நீதிநூல், அறிவுநூல்.

ஒப்புமை

*அறைபறை அன்னர் கயவர்தாங் கேட்ட*
*மறைபிறர்க் குய்த்துரைக்க லான்.*

**திருக்குறள்- 1076**

**பாட வேறுபாடு 1:3. உய்க்குமவன்.**

...

**91.**

**உத்தமர்தாம் ஈயுமிடத்(து) ஓங்குபனை போல்வரே**
**மத்திமர்தாம் தெங்குதனை மானுவரே - முத்தலரும்**
**ஆங்கமுகு போல்வார் அதமர் அவர்களே**
**தேங்கதலி யும்போல்வார் தேர்ந்து.**

**அ-ள்:** பனை - பனைமரம். தெங்கு - தென்னைமரம். மானுவர் - ஒப்பாவர். கமுகு - பாக்குமரம். தேங்கதலி - ஒருமுறைக்கு மேல் மறுமுறை ஈனாத வாழைமரம்.

ஒப்புமை

*கடையாயார் நட்பில் கமுகனையர்; ஏனை*
*இடையாயார் தெங்கின் அனையர்; தலையாயார்*
*எண்ணஅரும் பெண்ணைபோன்று இட்டஞான்று*
*இட்டதே,*
*தொன்மை உடையார் தொடர்பு.*

**நாலடியார் - 216.**

வினயமுட னன்னமுஞ் சுகமுமே ஷமுமென்ன
வித்தையுரை தன்னையறிவார்
மிகுதாழை கற்பகங் கன்னன்மலர் போன்மரபு
விதமாய் விளங்கவருவார்

பனையினொடு நாளிகே ரங்கமுக மெனவே
பரிந்தவர்க் கன்புகூர்வார்
பனசமுஞ் சூதமும் பாடலமு மென்னவே
பண்பினுட னுதவிசெய்வார்

சினமருவி னீரெழுத் தொடுமண லெழுத்துடன்
சிலையெழுத் தெனமாறுவார்
செப்புமிவர் தமையாதி யந்தமாப் பார்க்கவே
சிந்தைதனி லாய்ந்துபுவிமேல்

மனிதர்உத் தமர்கள்மத் திமர்அதமர் மூவர்காண்
மணவாள நாராயணன்
மனதிலுறை யலர்மேலு மங்கைமண வாளனே
வரதவேங் கடராயனே.

**திருவேங்கட சதகம் - 96.**

...

**92.**

**எல்லோர் தமக்கும் இனிதுதவல் அன்றியே**
**நல்லோர் தமக்குதவி நாடாரே - வல்லதரு**
**நாமநிதி மேகம் நயந்துதவல் அன்றியே**
**தாமுதவி நாடுமோ சாற்று.**

**அ-ள் :** வல்ல தரு - விரும்பும் பொருள்களைக் கொடுக்கவல்ல தேவதாரு எனும் மரம். நாமநிதி - பெருமைமிகு சங்கநிதி, பதுமநிதி ஆகியன. சாற்று - கூறுக !

**93.**

**வெய்யோன் கிரணம் மிகச்சுடுமே வெய்யவனில்**
**செய்யோன் கிரணமிகத் தீதாமே - வெய்யகதிர்**
**எல்லோன் கிரணத்(து) எரியினிலும் எண்ணமில்லார்**
**சொல்லே மிகவுஞ் சுடும்.**

**அ-ள்:** வெய்யோன் - சூரியன். கிரணம் - ஒளி, ஒளிக்கதிர், சுடர். செய்யோன் - அக்னி தேவன், நெருப்பு. எல்லோன் - சூரியன். எண்ணமில்லார் - நல்ல எண்ணம் இல்லாதவர்கள்.

...

**94.**

**திங்கள் அமிர்த கிரணமிகச் சீதளமே**
**திங்களினும் சந்தனமே சீதளமாம் - இங்கிவற்றின்**
**அன்பறிவு சாந்தம் அருளுடையார் நல்வசனம்**
**இன்பமிகும் சீதளமா மே.**

**அ-ள் :** திங்கள் - சந்திரன். சீதனம் - குளிர்ச்சி. சாந்தம் - அமைதி. நல்வசனம் - நல்லமொழி, நல்லபேச்சு.

...

## 95.

**சீராம்வெண் ணீற்றுத் திரிபுண் டரம்விடுத்தே**
**பேரான முத்தி பெறவிரும்பல், - ஆரமிர்த**
**சஞ்சீ வியைவிடுத்தே சாகா திருப்பதற்கு**
**நஞ்சே புசித்ததுபோல் ! நாடு.**

**அ-ள்:** திரிபுண்டரம் - மூன்று கோடாக இழுக்கப்பெறும் திருநீற்றுக்குறி. முத்தி - வீடுபேறு. ஆர் அமிர்த சஞ்சீவி - அருமையான, சாவாமை தரும் அமுதம். நாடு - எண்ணுக!

...

## 96.

**செந்தா மரைஇரவி சேருதயம் பார்க்குமே**
**சந்திரோத யம்பார்க்கும் தண்குமுதம் - கந்தமிகும்**
**பூவலரப் பார்க்கும் பொறிவண்(டு) அரனன்பர்**
**தேவரவைப் பார்ப்பர் தெளிந்து.**

**அ-ள் :** இரவி - சூரியன். குமுதம் - அல்லி, ஆம்பல். கந்தமிகும் - வாசனைமிக்க. பொறிவண்டு - புள்ளிகளையுடைய வண்டு. அரன் - சிவபெருமான். அரனன்பர் - சிவனடியார். தே வரவை - சிவபெருமானின் திரு அருளை.

...

## 97.

**வில்லமறு குக்கொவ்வா மென்மலர்கள் ; நால்வரெனும்**
**நல்லவன்பர் சொற்கொவ்வா நான்மறைகள்; - மெல்லிநல்லாய் !**
**ஆமந் திரமெவையும் ஐந்தெழுத்தை ஒவ்வாவே**
**சோமசுந்த ரர்க்கென்றே சொல்.**

**அ-ள் :** வில்லம் - வில்வம். அறுகு - அறுகம்புல். ஒவ்வா - இணையாகா. நால்வரெனும் நல்ல அன்பர் சொற்கு - சம்பந்தர், அப்பர், சுந்தரர், மணிவாசகர் எனும் நால்வரின் திருப்பாடல்களாகிய தேவார, திருவாசகப் பனுவல்களுக்கு. மெல்லிநல்லாய் - மென்னமையான நல்ல இயல்புகளை உடைய பெண்ணே ! (மகடூஉ முன்னிலை). சோமசுந்தரர் - சிவபெருமான். சொல் - சொல்லுக !

...

## 98.

**கல்லார் பலர்கூடிக் காதலித்து வாழினும்நூல்**
**வல்லான் ஒருவனையே மானுவரோ - அல்லாரும்**
**எண்ணிலா வான்மீன் இலகிடினும் வானகத்தோர்**
**வெண்ணிலா வாமோ விளம்பு.**

**அ-ள் :** காதலித்து - ஒருவரையொருவர் விரும்பி. நூல்வல்லான் - கல்வியறிவு மிக்க அறிஞன். மானுவரோ - ஒப்பாவாரோ. அல் ஆரும் - இருள் நிறைந்த. வான்மீன் - நட்சத்திரம். இலகிடினும் - ஒளிவீசினாலும். விளம்பு - கூறுக.

ஒப்புமை

*ஆயிரவ ரானும் அறிவிலார் தொக்கக்கால்*
*மாயிரு ஞாலத்து மாண்பொருவன் போல்கலார்;*
*பாயிருள் நீக்கும் மதியம்போல், பல்மீனும்*
*காய்கலா வாகும் நிலா.*

**பழமொழி நானூறு - 47.**

தாரகைக ளொருகோடி வானத் திருக்கினுஞ்
சந்திரற் கீடாகுமோ

.................................

பலனிலாப் பிள்ளைக ளனேகம் பிறந்தும் விற்
பனனொருவ னுக்குநிகரோ

**குமரேச சதகம் - 53.**

குலத்தையுந் தரிக்க நல்ல
குணமக வொன்றே போதும்
நலத்தையிங் கிதத்தைச் சாற்றும்
நன்றிலாச் சேய்கள் நூறு
பெலத்துடன் இருக்கி லென்னாம்
பெருகிடு மீன்கள் வானத்
தலத்திடை இருக்கி லென்னாம்
விளங்குதல் மதிதான் ஒன்றே.

**நீதிசாரம் - 11.**

சகலகுண சம்பன்னனான குமாரன் ஒருவனே போதும். துர்மார்க்கரான குமாரர்கள் நூறுபேர் இருந்தாலும் பலனொன்றுமில்லை என்றபடி. இதற்கு நிதர்சனம் ஒரு சந்திரன் உதயமானால் லோகம் முழுவதும் பிரகாஸிப்பிக்கிறான். அந்தச் சந்திரன் இல்லாமல் நட்சத்திரங்கள் எத்தனை இருந்தாலும் என்ன பிரயோசனம்? ஒன்றுமில்லை என்றபடி.

**நீதிசாரம் 47.**
**உரைநடை மொழிபெயர்ப்பு நூல்**

...

**99.**

**சந்தனத்தைச் சேர்தருவும் தக்க மணங்கமழும்**
**சந்தனத்தைச் சார்வேய் தழல்பற்ற - அந்தவனந்**
**தானும்அச் சந்தனமும் தன்னினமும் மாள்வதன்றித்**
**தானுங் கெடச்சுடுமே தான்.**

**அ-ள் :** தரு - மரம். வேய் - மூங்கில். தழல் - நெருப்பு. மாள்வது - எரிந்து அழிவது.

ஒப்புமை

நன்மணஞ்சேர் பூநிறைந்த நன்மரமொன் றான்முற்றப்
பன்மரஞ்சேர் காடும் பரிமளிக்கும் - தன்மையென
மிக்ககுணம் பற்பலவா மேவுமொரு புத்திரனால்
அக்குலமு மிக்குயரு மார்ந்து.

தீயமர மொன்றுநின்று செந்தீ வளர்ந்துதிக்க
ஆயவன முற்று மழலாகும் - ஆயதிறம்
போலக் குணமில்லாப் புத்திரனுந் தன்குலத்தைச்
சாலக் கெடுத்துவிடுந் தான்.

**சாணக்கிய நீதிவெண்பா - 11,12**

**100.**

**கங்கைநதி பாவம் சசிதாபம் கற்பகந்தான்**
**மங்க லுறும்வறுமை மாற்றுமே - துங்கமிகும்**
**இக்குணமோர் மூன்றும் பெரியோ ரிடஞ்சேரில்**
**அக்கணமே போமென்(று) அறி.**

**அ-ள்:** சசி - சந்திரன். தாபம் - வெப்பம். கற்பகம் - கற்பக மரம்.



# நீதிவெண்பா

## பாடல் முதற்குறிப்பு அகரநிரல்

(எண் : பாடல் எண்)

### அ



### ஆ



### இ

ஈ



உ



ஊ



எ



ஒ



ஓ

சி



சீ



செ



ஞா



த



தா

.....

பிற்சேர்க்கை - 1

# நீதிவெண்பா

- அறிஞர் மு. அருணாசலம்

இது பிற்கால நீதிநூல்களுள் ஒன்று. அவ்வையார் பாடிய மூதுரை, நல்வழி, பின்வந்த அறநெறிச்சாரம் ஆகிய நூல்களுக்குப் பின், கீழ்க்கணக்கின் யாப்பமைதியாகிய வெண்பா யாப்பலேயே தோன்றிய ஒரு நூல்; நீதிகளைச் சாமானிய மொழியில் எளிதில் புரியுமாறு வெண்பா யாப்பில் உணர்த்துவதால் வேறு பெயரில்லாமல் நீதிவெண்பா என்றே பெயர் பெற்றிருக்கிறது. மூதுரையும் நல்வழியும் 30,40 பாடல்களுடையன. அறநெறிச்சாரம் 226 பாடல்களுடையது. இந்நூலோ சம்பிரதாயமான 100 வெண்பாக்களுடையது. தனியே விநாயகர் காப்புச் செய்யுளொன்றும் உடையது. படிப்பே இல்லை என்று சொல்லத்தக்க சாமானியப் படிப்பறிவு உள்ள எல்லா மக்களும், 20 ஆம் நூற்றாண்டின் தொடக்க காலத்தில், நீதிவெண்பா நன்கு அறிந்திருந்தார்கள். அவர்களுக்கு வாக்குண்டாம் தெரியாது. நல்வழி தெரியாது. ஆனால் நீதிவெண்பா நன்கு தெரியும். படிக்கத் தெரியாதவர்கள் கூட, செவி வழியாக இதைக் கற்றிருந்தார்கள். காரணம், இந்நூல் நீதியோடு கூட உலகியலையும் கூறுகிறது. நடைமிகவும் சாமானிய நடை; பொருளும் உதாரணங்களும் எல்லோருக்கும் தெரிந்தவை, நன்கு மனத்தில் நிற்பவை.

இந்நூலின் பல பொருள்கள் எளிதாய்த் தமிழுக்கே உரியனபோல் தோற்றினும், வடமொழியிலுள்ள நீதி சாஸ்திரம் என்ற ஒரு பிற்காலத் தொகை நூலைத் தழுவிச் செய்யப்பட்டது என்றும், சில பாடல்கள் மொழிபெயர்ப்பே என்றும் ஆன்றோர் கருதுவர்.

## ஆசிரியர்

இந்நூலின் ஆசிரியர் பெயர் தெரியவில்லை. ஆனால் இவர் சைவர், வாழ்க்கையனுபவம் நிரம்பியவர் என்று சொல்லலாம். சோமசுந்தரக் கடவுளைக் குறிப்பிடுகின்றமையால் இவர் மதுரைக்குரியவரென்று கருதலாம் :

வில்லம்அறு குக்கொவ்வா மென்மலர்கள்; நால்வரெனும்
நல்லஅன்பர் சொற்கொவ்வா நான்மறைகள்; -மெல்லிநல்லாய்
ஆமந் திரம்எவையும் ஐந்தெழுத்தை ஒவ்வாவே
சோமசுந்த ரற்கென்றே சொல்.

வில்வம் அறுகு ஆகிய பத்திரங்களையும், நால்வர் பாடல்களையம் ஐந்தெழுத்தையும் உயர்த்திச் சொல்வதால், இவர் சிறந்த சைவரென்பதற்கு வேறு சான்று காட்டவேண்டியதில்லை. சங்கரன் பாதம் பூசித்தலே நிலையானது (51, 52) வெண்ணீற்றுத் திரிபுண்டரம் விடுத்து முத்தி பெறல் இயலாது (95); பாவி தனம் சிவன் அன்பர்பால் மேவாது (63) ; சிவனே சிவனே சிவனே என்பார் (58); புரமெரித்த அண்ணலடியார் பொருள்கள் செந்தீயினும் கொடிய (78) (கவரலாகாது என்பது கருத்து) ; அரன் அன்பர் தேவரவைப் பார்ப்பர் (96); சிவயோகி (56, 68, 69) என்ற கருத்துக்களும் குறிப்பிடத் தக்கன.

ஒருவேளை இவ்வாசிரியர், பட்டினத்தார் சீடர் பரம்பரையில் வந்தவரோ என்று எண்ணத் தோன்றுகிறது. பல பாடல்களில் பெண்களைப் பழிக்கிறார். பெண் பேசுவதால் உலகம் கெடும் (31), முதல் மூன்று யுகங்களிலும் முறையே ரேணுகை சானகி திரௌபதி கூற்றுவராயிருந்தார்கள், கலியுகத்தில் வீடுதோறும் கூற்றுவன் (32); மானார் விழியார் மனம் காண்பதரிது (55) என்ற கருத்துக்களைக் காண்க.

**காலம்**

இந்நூலின் காலம் 16ஆம் நூற்றாண்டு என்று அறியப் பெரிதும் வியப்பாயிருக்கிறது; நடையையும் பொருளமைப்பையும் பார்த்தால் மிகவும் பிற்காலமென்று எண்ணத் தோன்றுகிறது.

திருப்போரூர் சிதம்பர சுவாமிகள் தாம் சாந்தலிங்க சுவாமிகளின் 'கொலை மறுத்தல்' என்ற நூலுக்குச் செய்த உரையில், இதன் 80 ஆம் பாடலை மேற்கோள் காட்டுகிறார். இப்பாடல் நீதிசாரம் என்ற பெயர் சொல்லிக் காட்டப்பட்டுள்ளது; ஆனால் பாடல் நீதிவெண்பாவிலுள்ளது. (நீதிசாரம் விருத்த யாப்பால் ஆன நூல்) சுவாமிகள் காலமான கி.பி.1659. அவர் காலமாவதற்குப் பல ஆண்டுகள் முன்னதாகவே அவ்வுரை எழுதியதாக வரலாறு; உத்தேசம் 1645 இருக்கலாம். மேற்கோள் காட்டும் அளவு இந் நூலுக்கு அன்று பிரசித்தி ஏற்பட்டிருக்க வேண்டுமானால், 50-60 ஆண்டு முற்பட்டதென்று கொண்டாலும் கூட, நூலின் காலம் கி.பி.1590 ஆகிறது.

**நூற்பொருள்**

இந்நூல் வடமொழி நீதி சாத்திரக் கருத்துக்களைத் தமிழில் சொல்வதால், பாடல்கள் ஒரு தனி அமைப்பைப் பெற்றிருக்கின்றன. ஒவ்வொரு பாடலும் மூன்று அல்லது நான்கு கருத்துக்களைத் தொகுத்துச் சொல்கிறது. புராணக் கதைகள் சிலவும் குறிப்பிடப்பட்டுள்ளன. சில பஞ்சதந்திரக் கதைகள்-வேடன் வேதியனைக் காத்தது, குரங்கு அரசனை வெட்டியது, கீரியைப் பார்ப்பனத்தி கொன்றது, ஏரண்ட முனி காவிரிச் சுழலில் வீழ்ந்தது, காக்கைக்கு இடம்கொடுத்து அன்னம் இறந்தது, அகத்தியர் கடலை உண்டது ஆகிய கதைகள் குறிப்பிடத்தக்கன. பல பாடல்கள் மகடூஉ விளியாகச் செய்யப் பெற்றுள்ளன. திகம்பர சைனர் குறிப்பிடப் பட்டுள்ளனர்.

திருக்குறள் நாலடி ஆகியவற்றின் பாடற் கருத்துக்களும்

தொடர்களும் அப்படியே அமைக்கப் பெற்றிருக்கவும் காணலாம் (49, 46). அவ்வையாரின் 'தாயோ டறுசுவை போம்' என்ற தனிப் பாடல் ' மாதா மரிக்கின் மகன் நாவின் நற்சுவை போம்' (61) என்ற பாடலில் எடுத்துவைக்கப் பெற்றுள்ளது. பற்களாகிய பகைவரிடம் உறவாடியே நா நன்மை பெறுகிறது (5), இரவலனிடம் போகக் காற்றும் அஞ்சும் (8), தீயவரைக் கண்டால் விலகுதல், முதலான கருத்துக்கள் பழமொழி போலக் கல்லார் நாவிலும் வழங்குவதைக் காணலாம். உணவில் அளவு படுத்திக் கொள்ள வேண்டுமென்பதை ஒரு பாடல் ஆணியறைந்தாற்போற் கூறுகிறது:

ஒருபோது யோகியே, ஒண்தளிர்க்கை மாதே,
இருபோது போகியே என்ப ; - திரிபோது
ரோகியே; நான்குபோ துண்பான் உடல்விட்டுப்
போகியே என்று புகல்.

ஈவதை விலக்குபவர், பழமரத்திற் கட்டிய முள்ளை யொப்பார் என்று இவர் கூறியிருப்பது, இவர் சிறந்த உழுதூண் வாழ்க்கையுடையவரென்று காட்டும்.

தாமும்கொ டார்; கொடுப்போர் தம்மையும்ஈ யாதவகை
சேமம்செய் வாரும் சிலருண்டே; - ஏமநிழல்
இட்டுமலர் காய்கனிகள் ஈந்துதவும் நன்மரத்தைக்
கட்டுமுடை முள்ளெனவே காண்.

பெண்ணைக் குறைவாகப் பேசுகின்ற இவர் பெண்ணின் இலக்கணத்தை மிகவும் அழகாகச் சொல்கிறார்; நன்கறிந்த பாடல் :

அன்னை தயையும், அடியாள் பணியும் மலர்ப்
பொன்னின் அழகும், புவிப்பொறையும்-வன்னமுலை
வேசி துயிலும், விறல்மந் திரிமதியும் -
பேசில் இவையுடையாள் பெண்.

இப்பாடல் 'கார்யேஷு தாசீ' என்ற பர்த்திருகரி நீதி சதகத்தின் மொழிபெயர்ப்பென்று சொல்லத் தகும் :

கார்யேஷுதாஸீ கருணேஷு மந்த்ரீ
ரூபேச லக்ஷ்மீ க்ஷமயா தரித்ரீ
ஸ்நேஹேச மாதா சயனேது வேச்யா
ஷட்தர்ம யுக்தா குலதர்ம பத்னீ.

உண்மையை யாரும் விரும்பமாட்டார்கள்; பொய்யையே விரும்புவார்கள்: கள் இருந்த இடத்தில் விலை போக, பால் வீடுதோறும் சென்று விலையாவதுபோல என்று ஒரு பாடலால் நயம்படச் சொல்கிறார்:

சத்தியம்எக் காலும் சனவிருத்த மாகுமே,
கத்தியபொய் யார்க்கும் இதமாகும் - நத்தியபால்
வீடுதொறும் சென்ற விலையாம், மதுவிருந்த
வீடுதனி லேவிலையா மே.

தெய்வம் மெய் என்பவருக்கே மெய்.

மந்திரமும் தேவும் மருந்தும் குருவருளும்
தந்திரமும் ஞானம் தருமுறையும் - யந்திரமும்
மெய்யென்னில் மெய்யாய் விளங்குமே, மேதினியில்
பொய்யென்னில் பொய்யாகிப் போம்.

பதிப்பு. பல சாமானியப் பதிப்புக்கள். கா. நமசிவாய முதலியார் தமிழ்க் கடல் வரிசை 1931, திருத்தமானது.

தமிழ் இலக்கிய வரலாறு :
16 ஆம் நூற்றாண்டு,
பாகம் – 2 நூலிலிருந்து (பக். 72 – 77)

.....

பிற்சேர்க்கை - 2

## தமிழில் நீதி நூல்கள்

*பதினெண் கீழ்க்கணக்கில் இடம்பெற்றுள்ள நீதிநூல்கள் :*

1. திருக்குறள் - திருவள்ளுவர்
2. நாலடியார் - சமண முனிவர்கள்
3. நான்மணிக்கடிகை - விளம்பி நாகனார்
4. திரிகடுகம் - நல்லாதனார்
5. சிறுபஞ்சமூலம் - காரியாசான்
6. ஆசாரக்கோவை - பெருவாயின் முள்ளியார்
7. பழமொழி நானூறு - முன்றுரையரையனார்
8. ஏலாதி - கணிமேதாவியார்
9. இன்னா நாற்பது - கபில தேவர்
10. இனியவை நாற்பது - பூதஞ்சேந்தனார்
11. முதுமொழிக் காஞ்சி - மதுரைக் கூடலூர் கிழார்

*பிற்கால நீதிநூல்கள் :*

1. ஆத்திசூடி - ஔவையார்
2. கொன்றைவேந்தன் - ஔவையார்
3. மூதுரை (அ) வாக்குண்டாம் - ஔவையார்
4. நல்வழி - ஔவையார்
5. வெற்றிவேற்கை - அதிவீரராம பாண்டியர்

6. உலக நீதி - உலகநாத பண்டிதர்
7. நன்னெறி - சிவப்பிரகாச சுவாமிகள்
8. நீதிநெறிவிளக்கம் - குமரகுருபரர்
9. அறநெறிச்சாரம் - முனைப்பாடியார்
10. நீதிவெண்பா
11. நீதிபோதவெண்பா - முத்துராமலிங்க சேதுபதி
12. செழியதரையன் நன்னெறி
13. நரிவிருத்தம் - திருத்தக்க தேவர்
14. கபிலர் அகவல்
15. இராசகோபால மாலை
16. அருங்கலச் செப்பு
17. நீதி நூல் - மாயூரம் வேதநாயகம் பிள்ளை
18. பெண்மதிமாலை - ,, ,,
19. பெண்புத்திமாலை - ,, ,,
20. ஆத்திசூடி வெண்பா
21. ஆத்திசூடி புராணம்
22. புதிய ஆத்திசூடி - பாரதியார்
23. ஆத்திசூடி - பாரதிதாசன்

*நீதி சதக நூல்கள் :*

1. குமரேச சதகம் - குருபாத தாசர்
2. அறப்பளீசுர சதகம் - அம்பலவாணக் கவிராயர்
3. கயிலாச நாதர் சதகம் - சேலம் சிதம்பரப் பிள்ளை
4. அண்ணாமலைச் சதகம் - திருச்சிற்றம்பல நாவலர்
5. திருவேங்கட சதகம் - நாராயண பாரதியார்
6. தண்டலையார் சதகம் - படிக்காசுப் புலவர்
7. கோவிந்த சதகம் - நாராயண பாரதியார்
8. செயங்கொண்டார் வழக்கம் / சதகம்
   - முத்தப்பச் செட்டியார்
9. நம்பிச் சதகம் - யோகீச்வரன் ராமன் பிள்ளை
10. திருவேரகச் சதகம் - ரிஷியூர்

வித்வான் கே. அருணாசலம்

11. ஸ்ரீ கரிவரதப் பெருமாள் சதகம் - வி. பொன்னுச்சாமி சோதிடன்

*பிறமொழியிலிருந்து மொழிபெயர்க்கப்பட்ட நீதிநூல்கள் :*

1. பஞ்சதந்திரச் செய்யுள் - வீரமார்த்தாண்ட தேவர்
2. பஞ்சதந்திரம் (செழியதரையன்)
3. சாணக்கிய நீதிவெண்பா
4. வேமன நீதிவெண்பா
5. நன்மதி சதகம் (சுமதி சதகம்)
6. மனுநீதி சதகம்
7. மனுநீதி சாத்திரம் (உரைநடை)
8. விதுர நீதி (உரைநடை)
9. வீட்டும நீதி (பீஷ்ம நீதி) (உரைநடை)
10. சுக்கிர நீதி (பண்டிதமணி மொழிபெயர்ப்பு)
11. அர்த்த சாத்திரம் ( ,, )
12. நீதி சாஸ்திரம்
13. பத்ருஹரி நீதி சதகம்
14. நீதி சாரம் (செய்யுள் நூல்)

*அறியப்படும் வடமொழி நீதிநூல்கள் :*

1. நீதி சந்திரிகை
2. ப்ருகத் பராசர ஸ்மிருதி
3. நீதிமார்க்க பிரிதீவிகா
4. ஹிதோபதேசம்
5. சுபாஷித ரத்னமாலா
6. சங்கலிகித ஸ்மிருதி
7. சப்த கல்ப த்ருமம்
8. சாருசரியா (க்ஷேமேந்திரன் இயற்றியது)
9. அர்த்த சாத்திரம்
10. மனு நீதி சாத்திரம்
11. மனு நீதி சதகம்
12. சாணக்ய நீதிவெண்பா

13. பர்த்ருஹரி நீதிசதகம்
14. பஞ்ச தந்திரம்
15. நீதி சாஸ்திரம்
16. விதுர நீதி
17. வீட்டும நீதி
18. சுக்கிர நீதி
19. சாணக்ய நீதி சமுச்சயம் (அ) ராஜநீதி சமுச்சயம்
20. சுபாஷித ரத்னமாலா
21. நீதி பிரகாசிகா

*நீதிப்பாக்களைக் கொண்ட தொகைநூல்கள்:*

1. விவேக சிந்தாமணி
2. தனிப்பாடல்திரட்டு
3. நீதித்திரட்டு (சரசுவதி மகால் வெளியீடு)

.....



## நீதிவெண்பா முற்பதிப்புகள் சில

**1. நீதிவெண்பா மூலமும் உரையும்**

காஞ்சிபுரம் சபாபதி முதலியாரால் பல பிரதிகளைக்கொண்டு பரிசோதித்து உருவாக்கப்பட்டது, கல்வி விளக்க அச்சுக் கூடம், விபவ ஞூ

**2. நீதிவெண்பா**

ஆறுமுக நாவலரவர்கள் சிதம்பர சைவப் பிரகாச வித்தியாசாலைத் தருமபரிபாலகர் பொன்னம்பல பிள்ளை செய்த உரையுடன், சென்னபட்டணம் வித்தியாநுபாலன யந்திரசாலை, மூன்றாம் பதிப்பு, பரிதாபி ஞூ.

3. *1708* இல் சீகன்பால்கு அவர்களால் ஜெர்மன் மொழியில் மொழிபெயர்க்கப்பட்ட நீதிவெண்பா *1930* இல் பதிப்பிக்கப்பட்டுள்ளது. Uitgave Van De Koninklijke Akademie, Van Wetenschappen Te, Amsterdam,1930.

4. **வெற்றிவேற்கை, உலகநீதி, நீதிவெண்பா,** கா.நமச்சிவாயர் பதிப்பு, தமிழ்க்கடல் வெளியீடு, சாந்தோம், சென்னை, *1931.*

5. **Ten Tamil Ethics** *(நீதி நூல்கள் பத்து)* by T.B. Krishnaswami, M.A., B.L., The South India Saiva Siddhanta Works Publishing Society, Tinnevelly, Limited, Tirunelveli, Madras - 1.

First Edition : March, 1937. Reprints: Nov. 1950; Oct. 1957.
N-14

தமிழ் மூலமும் ஆங்கில மொழிபெயர்ப்பும் கொண்ட பதிப்பு.

6. **நீதிநூற்கொத்து (மூலமும் உரையும்)** இரண்டாம் பாகம்.

(நீதிவெண்பா, அறநெறிச்சாரம், நீதிநெறிவிளக்கம் ஆகியன அடங்கிய தொகுதி)

தி.சு. இளவழகனார் உரை, கழகப் பதிப்பு, சென்னை, நீதிவெண்பா: 6 ஆம் பதிப்பு : 1952. மறுபதிப்புகள் : 1955, 1958.

7. **நீதிநூல்கள் (இரண்டாம் பாகம்)**

அ.பு. அறவாழி, பூம்புகார் பிரசுரம், சென்னை, முதற்பதிப்பு 1979.

(அறநெறிச் சாரம், நீதிநெறி விளக்கம், நீதிவெண்பா ஆகியன அடங்கிய தொகுதி)

8. **நல்வாழ்விற்கு நீதிமொழிகள்,**

(உலகநீதி, முதுமொழிக்காஞ்சி, நீதிவெண்பா ஆகியவற்றின் மூலமும் உரையும் ஆங்கில மொழிபெயர்ப்பும் அடங்கிய தொகுதி) பேராசிரியர் சு.ந. சொக்கலிங்கம் எம்.ஏ., வானதி பதிப்பகம், சென்னை, முதல் பதிப்பு 1996.

9. **நீதிநூற்களஞ்சியம் (எளிய தெளிவுரையுடன்)**

(ஆத்திசூடி, கொன்றைவேந்தன், மூதுரை (வாக்குண்டாம்), நல்வழி, நன்னெறி, உலகநீதி, நறுந்தொகை, வெற்றிவேற்கை, நீதிவெண்பா, அறநெறிச்சாரம், நீதிநெறிவிளக்கம்)

பூவை அமுதன், கவிதா பப்ளிகேஷன்ஸ், சென்னை, மு.ப. 1996, இ.ப.2000.

...

# துணை நூற்பட்டியல்

**அறநெறிச் சாரம்,** முனைப்பாடியார் இயற்றியது, கழகப் பதிப்பு, சென்னை, முதற்பதிப்பு 1936; மறுபதிப்பு : 1960.

**இராமாயணம் - உத்தர காண்டம்** (முதற்பகுதி), ஒட்டக்கூத்தர் இயற்றியது, உரையாசிரியர் : வித்துவான் செ. வேங்கடராமச் செட்டியார், அண்ணாமலைப் பல்கலைக்கழகம், மு.ப.1977.

**கம்பராமாயணம் - கிஷ்கிந்தா காண்டம்,** வை.மு. சடகோபராமாநுஜாசாரியாரும் சே.கிருஷ்ணமாசாரியாரும் வை.மு. கோபாலகிருஷ்ணமாசாரியரும் இயற்றிய விரிவுரையுடன் , கணேச அச்சுக்கூடம், சென்னை, துந்துபி.

**காஞ்சிப் புராணம்,** சிவஞான யோகிகள் இயற்றியது, கலாரத்நாகர அச்சுக்கூடம், சென்னை , 1910.

**சாணக்கிய நீதிவெண்பா,** சுன்னாகம் அ. குமாரசுவாமிப் பிள்ளை மொழிபெயர்ப்பு, செந்தமிழ் - இதழ், 1914 ஆம் ஆண்டில் வெளிவந்த இதழ்களில் இடம்பெற்றது, தொகுதி - 12 .

**சிலப்பதிகாரம்,** உ.வே.சாமிநாதையர் பதிப்பின் நிழற்படப் பதிப்பு, தமிழ்ப்பல்கலைக்கழகம், தஞ்சாவூர், 1985.

**சுக்கிர நீதி (தமிழ்),** பண்டிதமணி மு. கதிரேசச் செட்டியார் மொழிபெயர்த்தியற்றியது, மேலைச் சிவபுரிச் சன்மார்க்க சபையாரால் வெளியிடப்பெற்றது, 1926.

**சுவடியியல்,** முனைவர் பூ. சுப்பிரமணியம், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, மு.ப.1991.

செயங்கொண்டார் சதகம் (உரை விளக்கத்துடன்), பதிப்பாசிரியர் : டி. சந்திரசேகரன், அரசினர் கீழ்த்திசைச் சுவடி நூலகம், சென்னை, 1955.

செழியதரையன் பிரபந்தங்கள், பொதுப் பதிப்பாசிரியர் : பேரா. மு. சண்முகம் பிள்ளை, குறிப்புரை: புலவர் ப.வெ. நாகராசன், தமிழ் பல்கலைக்கழகம், தஞ்சாவூர். மு.ப.1986.

தமிழ் இலக்கிய வரலாறு - பதினாறாம் நூற்றாண்டு - இரண்டாம் பாகம், மு. அருணாசலம், காந்தி வித்தியாலயம், திருச்சிற்றம்பலம், முதற் பதிப்பு 1975.

தனிப்பாடற்றிரட்டு (முதற்பாகம்), கா.சு. பிள்ளை உரையுடன், பி. இரத்தின நாயகர் ஸன்ஸ், சென்னை, 1957.

தனிப்பாடற்றிரட்டு (இரண்டாம் பாகம்), கா.சு. பிள்ளை உரையுடன், பி. இரத்தின நாயகர் ஸன்ஸ் , சென்னை, 1955.

திருக்குறள் மூலமும் பரிமேலழகர் உரையும், கழகப் பதிப்பு, சென்னை, 19 ஆம் பதிப்பு 1987.

திருக்குறுங்குடி நம்பி பேரில் நம்பிச்சதகம், யோகீச்வரன் ராமன்பிள்ளை இயற்றியது, திருவனந்தபுரம், 1944.

திருவாசகம், விளக்க உரை : ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர், ஸ்ரீ ராமகிருஷ்ண தபோவனம், திருப்பராய்த்துறை, இரண்டாம் பதிப்பு 1970.

தேவாரம், திருநாவுக்கரசர் தேவாரப் பதிகங்கள், திருமுறை 4,5,6, கயப்பாக்கம் சதாசிவ செட்டியார் அவர்களால் பார்வையிடப்பெற்றன, கழகப் பதிப்பு, சென்னை, 1973.

**தொல்காப்பியம்** எழுத்ததிகாரம், நச்சினார்க்கினியர் உரை, கழகப் பதிப்பு, சென்னை.

**நன்மதி வெண்பா,** (தெலுங்கு சுமதி சதகத்தின் மொழியாக்க நூல்), மொழிபெயர்த்துப் பாடலாக்கியவர்: எம்.ஆர். ஸ்ரீநிவாசய்யங்கார், வைஜயந்தி அச்சியந்திர சாலை, சென்னை, 1910.

**நீதிசாரம் மூலமும் உரையும்,** பு.சி. புன்னைவனநாத முதலியார் எழுதிய குறிப்புரையுடன், கழகப் பதிப்பு, சென்னை, 1937.

**நீதி சாஸ்திரம்,** சாத்தனூர் விஸ்வநாத சாஸ்திரிகளால் பரிசோதிக்கப்பட்டது. சாஸ்திர சஞ்சீவினி முத்திராட்சர சாலை, சென்னை, 1911.

**நீதிநூற்கொத்து மூலமும் உரையும்** (முதற்பாகம்), ந.மு.வே. நாட்டார் உரையுடன் கூடிய பதிப்பு, கழக வெளியீடு, சென்னை, மறுபதிப்பு 1955-1956.
(ஆத்திசூடி, கொன்றைவேந்தன், நறுந்தொகை, மூதுரை, நல்வழி, நன்னெறி ஆகியன அடங்கிய தொகுதி)

**நீதிபோதவெண்பா,** இராமநாதபுர அரசர் முத்துராமலிங்க சேதுபதி இயற்றியது, குறிப்புரை: புலவர் இரா. இளங்குமரன், கழகப் பதிப்பு, சென்னை, 1977.

**பஞ்சதந்திரப் பாடல்,** வீரமார்த்தாண்ட தேவர், பதிப்பாசிரியர் மே. வீ. வேணுகோபாலப் பிள்ளை, புக்ஸ் (இந்தியா) பிரைவேட் லிட்., சென்னை, மு.ப. 1958.

**பதினெண்கீழ்க்கணக்கு,** முதல் தொகுதி மற்றும் இரண்டாம் தொகுதி, வெளியிடுவோர் : எஸ். ராஜம், சென்னை, மு.ப.1959.

பன்னிரு சதகத் திரட்டு, பி. இரத்தின நாயகர் ஸன்ஸ்,
சென்னை, 1960.

பாரதிதாசன் கவிதைகள், நான்காம் தொகுதி, பாரி நிலையம்,
சென்னை, முதற்பதிப்பு, 1977.

புறநானூறு மூலமும் உரையும், உ.வே.சாமிநாதையர்.
பதிப்பின் நிழற்படப் பதிப்பு,
தமிழ்ப்பல்கலைக்கழகம், தஞ்சாவூர், 1985.

விவேக சிந்தாமணி, பாகங்கள் 1&2 உரையுடன், மணிவாசகர்
பதிப்பகம், சென்னை, மறுபதிப்பு, 1995.

ஜெர்மானிய இந்திய இயல் அன்றும் இன்றும்,
தென்மொழிகள் புத்தக டிரஸ்ட், இந்தியா &
ஹோர்ஸ்ட் ஹெர்ட்மென் வெர்லாக், ஜெர்மனி,
சென்னை, 1970.

**The First Protestant Missionary to India
Bartholomaeus Ziegenbalg 1683 - 1719 A.D.,**
Brijraj Singh, Oxford University press, New Delhi,
First Published, 1999.

...



# வேண்டுகோள்

கருணையுள்ளங்கொண்ட நம் முன்னோர்கள் அரிய பெரிய இலக்கியங்களையும், பிறவற்றையும், பனை ஓலைகளில் எழுதிச் சுவடிகளாக நமக்குத் தந்தனர். அவை, பல்வேறு இடங்களில் முடங்கி உள்ளன. சுவடிகள் பழுதடைவதற்குமுன் சரசுவதி மகாலுக்கு அன்பளிப்பாகக் கொடுத்துதவினால், அவை மக்களுக்குப் பயன்படும்.

மகாலுக்குக் கொடுப்பதன் மூலம், சுவடி தந்தவர்களும் சுவடி எழுதியோரும் அழியாப்புகழை, பெருமைசால் சரசுவதி மகால் உள்ளளவும் பெறுவர். அவை பதிப்பாகி வருமாயின் சுவடி தந்தார் பெயர் இடம் பெறுவதோடு, அப்பதிப்பில் ஐந்து பிரதிகளும் பெறுவர்.

எனவே நாம் பெற்ற பேறு பெறுக இவ்வையம் என்ற எண்ணமுடைய நற்பண்பாளர்கள் தம்மிடமுள்ள சுவடிகளைச் சரசுவதி மகாலுக்குத் தந்துதவ வேண்டுகிறேன்.

மாவட்ட ஆட்சியர் மற்றும் இயக்குநர்,
சரசுவதி மகால் நூலகம்,
தஞ்சாவூர்-613 009.

# எமது வெளியீடுகள்

| | | ரூ. பை |
|---|---|---|
| 1. | அரிச்சந்திரன் அம்மானை | 75-00 |
| 2. | ஆற்றுப்படைத் தொகுதி | 45-00 |
| 3. | மார்க்கண்டேயன் அம்மானை | 40-00 |
| 4. | மலையருவி | 125-00 |
| 5. | கணக்கதிகாரம் | 150-00 |
| 6. | பிரபோத சந்திரோதயம் | 153-00 |
| 7. | இராசகோபால மாலை | 18-00 |
| 8. | தொல்காப்பியம் (எழுத்ததிகாரம்) | 55-00 |
| 9. | தொல்காப்பியம் (சொல்லதிகாரம்) | 100-00 |
| 10. | தொல்காப்பியம் ஆத்ரேயர் உரை | 40-00 |
| 11. | ஐந்து தமிழிசை நாட்டிய நாடகங்கள் | 50-00 |
| 12. | சிறுத்தொண்டர் இசைநாடகம் | 35-00 |
| 13. | வீணை | 28-00 |
| 14. | திருப்பெருந்துறைப் புராணம் | 86-00 |
| 15. | ஆனந்த கந்தம் (ரசவாத நூல்) | 100-00 |
| 16. | சித்தமருத்துவச் சுடர் | 200-00 |
| 17. | வைத்திய ரத்னாவளி | 160-00 |
| 18. | நாடி வாகடம் | 150-00 |
| 19. | சரசுவதி மகால் - ஒரு வழிகாட்டி நூல் | 20-00 |
| 20. | தஞ்சை நாயக்கர் வரலாறு | 205-00 |
| 21. | வராகர் ஓரா சாத்திரம் | 150-00 |
| 22. | காலப்பிரகாசிகை | 80-00 |
| 23. | ஜாதகசந்திரிகை | 40-00 |
| 24. | பூர்வபாராசர்யம் | 150-00 |
| 25. | குந்தமாலா | 40-00 |